# வாழ்வின் இணையிலா இனிமைகள் அவை என்றென்றும் புதுமைகள்




நீங்கள் எப்போதும்
விரும்பும் சுகந்த மணம்

# வாசகர்கள் பற்றி எழுத்தாளர்கள்



● ஒரு நல்ல சிறுகதை எழுத்தாளனுக்கும் வாசகனுக்குமிடையே நிகழுகின்ற உரையாடலாக இருக்க வேண்டும். வாசகன் அக்கதையைப் படித்து முடித்த பிறகு அவன் சிந்தனையைத் தூண்டும் முறையில் அதன் கருத்துப் எல்லை அதிகரித்துக் கொண்டே போதல் அவசியம்.

—இந்திரா பார்த்தசாரதி
—இலக்கியச் சிந்தனை சிறுகதைத் தொகுதி வெளியீடு ஒன்றின் முன்னுரையில்



● வாசகர்களுக்காக நான் எழுதுவதில்லை. நான் எழுதுவதை ஏற்று விரும்பிப் படிப்பவர்களே என் வாசகர்கள். குழந்தை கேட்பதையெல்லாம் (demands) கொடுப்பது தாயின் கடமை என்று சொல்லிவிட முடியாது. குழந்தையின் தேவையை (needs) அறிந்து பூர்த்தி செய்பவளே தாய். அத்தகைய மேலான பொறுப்புணர்ச்சியுடன் நான் செயல்படுகிறேன்.

—ஜெயகாந்தன் ஒரு பேட்டியில் (1973)



● ...இந்த நாவல் பற்றி பல ஆயிரக்கணக்கான வாசகர்கள் மனமுருகிப் பாராட்டி எழுதினார்கள். அவர்களில் சிலருடைய அபிப்பிராயங்களையே இங்கு இந்த நாவலுக்கு முன்னுரையாகத் தொகுத்தளிக்கிறேன். இது குடியரசுக் காலம். தரமான வாசகப் பெருமக்களின் அபிப்பிராயமே எதிர்கால முடிவும், நிகழ்கால துணிவுமாகும்.

—'பொன் விலங்கு' முகவுரையில் நா. பா.



● நல்ல சிறுகதைகளைப் படித்து முடித்தவுடன் மனம் உயர்ந்த அநுபவத்தால் நிறைவு கொள்கிறது. அந்த நிறைவு தரும் மௌனத்தில் மிதப்பது வாசகனுக்கு மிகச் சுகமான நிலை. அந்த நிலையை வார்த்தைகளாக மாற்றி, அபிப்பிராயங்களாகக் குழைத்து, கதைகளைப் பாராட்ட முயலும்போது அது வார்த்தைகளில் பிடிபடாமல் தப்பிவிடுகிறது.

—எஸ். வைத்தீஸ்வரன் (அசோகமித்திரனின் 'இன்னும் சில நாட்கள்' முன்னுரையில்)

● நான் சந்தித்த பல எழுத்தாளர்கள், மற்றவர்கள் கதையை யோக்கியமாகப்



படிக்கிற ஜாதி இல்லை என்பதை அவர்களுடன் பேச்சில் தெரிந்து கொண்டிருக்கிறேன். ஒரு நல்ல எழுத்தாளனாவதற்குச் சில சொந்தத் தியாகங்களும் பலிகளும் தவிர்க்க முடியாதவை. அவைகளில் ஒன்று சில துல்லியமான வாசகத் தன்மைகளை இழப்பது. நானும் இழந்திருக்கிறேன்.

—'சுஜாதா'
—'தனிமை' கதைத் தொகுதியில்



● ஒரு நூலை ஆர்ந்து படிப்பவன் வாசகனா? விமர்சகனா? வாசகன் தன்னை மறந்து படிப்பான். விமரிசகன் தன்னை நினைந்து படிப்பான்.

—'அரசு' பதில்கள் (6-5-76)



● வாசகர்கள் எதை விரும்புகிறார்கள் என்பதை விட, எதை விரும்ப வேண்டும் என்று நான் நினைக்கிறேனோ அதைக் கொடுத்துள்ளேன்.

—அகிலன் 'சித்திரப்பாவை'யில்.



● வாசகரை மனத்தில் வைத்துக் கொண்டு சிறுகதை எழுதுவது சிலருக்கு இளப்பமாயிருக்கிறது. 'வாசகரைத் திருப்திப்படுத்துவதாவது!' என்கிறார்கள். ஏனோ? நோயாளியைத் திருப்திப்படுத்துவது டாக்டரின் கடமையாகவும், கட்சிக்காரரைத் திருப்திப்படுத்துவது வக்கீலின் கடமையாகவும் இருக்கும்போது, வாசகரைத் திருப்திப்படுத்துவது பற்றி எழுத்தாளன் ஏன் அவமானப்பட வேண்டும்?

—ரா.கி. ரங்கராஜன்
—'பல்லக்கு' முன்னுரையில்

● ...கதையில் பல நிலைகள், பல தொனிகள் பிறக்கின்றன. பாத்திரமும் நிகழ்ச்சியும்தான் எடுத்த எடுப்பில் வாசகனுடைய பார்வையில் படுகின்றன. யார் எத்தகைய நிலைகளை அடைகிறார்கள், என்ன



செய்து அவற்றிலிருந்து மீள்கிறார்கள் என்பதைப் படிக்கும்போது, அவர்கள் அந்த அந்தப் பாத்திரமாகவே மாறி அத்தனை அனுபவங்களையும் பெற்று விடுகிறார்கள்.

—ஆர்வி 'தனிவழிப்பாதை'

# “கெட்டுப்போகிற பெண்களைப் பற்றி நான் எழுதமாட்டேன்” — லக்ஷ்மி





பழம்பெரும் எழுத்தாளர் லக்ஷ்மியை மயிலையில் வசிக்கும் வாசகர் எஸ். ஆர். பார்த்தசாரதி சந்தித்து உரையாடுகிறார்:

**கேள்வி:** நீங்கள் ஒரு நாவலாசிரியை என்ற முறையில்தான் பலரும் உங்களை அறிவார்கள். ஏன் சிறுகதைகளை மற்ற எழுத்தாளர்கள் போல் அதிகம் எழுதவில்லை?

**பதில்:** உண்மையைச் சொல்ல வேண்டுமென்றால், சிறுகதை எழுதப் பொறுமை இல்லை. சிறுகதை எழுத ஒரு சிறு நிகழ்ச்சி போதும். அதை blow-up பண்ணி எழுதிவிடலாம். ஆனால் சோம்பேறித்தனம் காரணமாக சிறுகதை எழுதத் தோன்றுவதில்லை. (சிரிக்கிறார்) ஆனால் நாவல் எழுதுகிறபோது உற்சாகமாக இருக்கிறது. நான் அனுபவித்து எழுதுகிறேன். நான் படைக்கும் கதாபாத்திரங்களுடன் ஒன்றிப்போய், அவர்களுடனேயே வாழ்வது போல் தோன்றுகிறது.

**கேள்வி:** உங்கள் சமீபத்திய நாவல்களில் பின் புலன் உத்தியை அதிகமாக கையாளுகிறீர்களோ என்று தோன்றுகிறது. ஆனால் உங்கள் பழைய நாவல்களில் இந்த அம்சம் இருக்கவில்லையே?

**பதில்:** என் பழைய நாவல்களில் கதாநாயகியை வெகு இளம் வயது பிராயத்திலிருந்தே அறிமுகப்படுத்தி, கதையை எழுதிக் கொண்டு போனேன். இப்போது நடுவிலிருந்து கதையைத் துவக்கி, பின்னோக்கிப் போய் எழுதிக் கொண்டு வருகிறேன். இது ஒரு உத்தி. பரவலாக எல்லா எழுத்தாளர்களும் இதைக் கையாளுகிறார்கள்.

**கேள்வி:** உங்கள் பாத்திரப் படைப்பு பெரும்பாலும் அழுத்தமாகவே அமைந்து வந்திருக்கிறது. இதற்குத் தனிக் காரணம் உண்டா?

**பதில்:** எல்லாக் கதைகளும் எட்டு வருஷம் பத்து வருஷம் என் மனசில் ஊறியவை. வெவ்வேறு கோணத்தில் பலரைப் பார்த்து உள்ளுணர்வில் ஊறிய பாத்திரங்கள். அதனால் அவை மறக்கமுடியாத காரக்டர்களாக உருவாக முடிந்தது.

**கேள்வி:** இப்போது படைக்கிற நாவல்களில் பாத்திரப் படைப்பு அவ்வளவு அழுத்தமாக இல்லை. இதற்கு என்ன காரணம்?

**பதில்:** இப்போது நிறையப் பேருடைய நாவல்களைப் படிக்கிறீர்கள். முன்பு அப்படியில்லையே! மிகக் குறைந்த கதைகளையே படிக்க வாய்ப்பு இருந்தது. நிறையப் படிக்கிறபோது காரெக்டர்கள் மனசில் நிற்பதில்லை. பளிச்சென்று தெரிவதில்லை. ஆனால் என்னைப் பொறுத்தவரை, என்னுடைய அழுத்தம் குறையவில்லை.

**கேள்வி:** நீங்கள் ஏன் பெண்களையே மையமாக வைத்து எழுதுகிறீர்கள்?

**பதில்:** Eye ஸ்பெஷலிஸ்ட், ENT ஸ்பெஷலிஸ்ட் என்று டாக்டர்கள் பலவகை இருப்பது போல் மற்றவர்கள் எப்படி எழுதினாலும், நான் பெண்களையே முக்கியமாக வைத்து எழுதுகிறேன். வேலைக்குப் போகும் பெண்களையும் அவர்களின் கஷ்டங்களையும் எழுதுகிறேன்... It gives pleasure to women folk. I'm happy.

**கேள்வி:** பத்திரிகைக்குத் தகுந்த மாதிரி நடையை மாற்றிக் கொள்வீர்களா?

**பதில்:** மாட்டேன். பத்திரிகைக்குத் தகுந்த மாதிரி, சொல்ல வேண்டிய விஷயத்தை மாற்றிக் கொள்கிறேன். இன்னொன்று, ரப்பர் மாதிரி கதையை இழுப்பது கிடையாது.

**கேள்வி:** நீங்கள் ஏன் சரித்திரக் கதை ஏதும் எழுதவில்லை?

**பதில்:** ‘வீரத் தேவன் கோட்டை’ என்று ஒரே ஒரு சரித்திரக் கதை எழுதியிருக்கிறேன். இதை மலேஷியாவில் பள்ளிக் கூடப் பாடப் புத்தகங்களில் ஒன்றாக வைத்திருக்கிறார்கள்.

**கேள்வி:** உங்களுக்கு யார் இன்ஸ்பிரேஷன்?

**பதில்:** நான் பிறந்த ஊரில் மின்னும்பள்ளி ஜமீன்தாரின் பங்களாவில் ஏராளமான தமிழ், ஆங்கில நூல்கள் கொண்ட லைப்ரரி இருந்தது. அங்கே ஆஸ்கார் வைல்ட், டால்ஸ்டாய் நூல்களைத்தான் முதலில் படித்தேன். பிறகு ‘விகட’னில் கல்கி எழுத ஆரம்பித்தார். அவரைத்தான்

என் குரு, முன்னோடி என்று சொல்ல வேண்டும். 'கல்கி'யைப் பிறகு சந்திக்க நேர்ந்தபோது, 'உங்களைத்தான் குருவாக நினைத்துக் கொண்டிருக்கிறேன்' என்று சொன்னேன். 'பேஷ், பேஷ்! என்னையும் மிஞ்சிவிடுவே!' என்று பெருந்தன்மையுடன் ஆசி கூறினார். என்னுடைய எழுத்துக்கு வாய்ப்புக் கொடுத்து வளர்த்த அமரர் வாசன் அவர்களையும் இங்கே நான் நன்றியுடன் குறிப்பிட வேண்டும்.

**கேள்வி:** பத்திரிகை ஆசிரியர்களைப்பற்றி?—

**பதில்:** எனக்கு ஒரு குறை உண்டு. எழுத்தில் தவறு கண்டு பிடித்து வாசகர்கள் கடிதம் எழுதும்போது கதாசிரியர் என்ன பதில் சொல்கிறார் என்று கேட்டு வாங்கிப் பதிலைப் பிரசுரிக்க வேண்டும். இதற்குத் தற்போது பத்திரிகை ஆசிரியர்கள் சான்ஸ் கொடுப்பதில்லை. இரண்டாவது ஒரு யோசனை: கதாசிரியர்களின் எழுத்துக்கு உற்சாகம் கொடுக்கும்படியான கடிதங்களைப் பிரசுரியுங்கள். அதற்கென்று ஒரேயடியாகப் புகழ்ச்சிக் கடிதங்களாகவே வெளியிடவேண்டுமென்பதில்லை. க்ரிட்டிக்கலாகவும் இருக்கட்டும். But not offending.

**கேள்வி:** உங்கள் கதைகளை ஏன் சினிமாவுக்கு இப்போது கொடுப்பதில்லை?

**பதில்:** அவர்கள் எல்லா உரிமையையும் எடுத்துக் கொண்டு விடுகிறார்கள் என்பதோடு, எழுதாத சீன் எல்லாம் படமாக எடுத்து விடுகிறார்கள். ஸினாப்ஸிஸ் கேட்கிறார்கள். டிஸ்கஷனுக்குக் கூப்பிடுகிறார்கள். என்னால் போக முடியுமா? இவை போக பண விஷயம். ஜேன் ஆஸ்டினும், பேர்ல் பக்கும் சினிமாவுக்காகவோ, சினிமாவை நம்பியோ எழுதவில்லையே!

**கேள்வி:** மாதந்தோறும் தற்போது வருகிற நாவல்கள் பற்றி?

**பதில்:** நிறைய வாசகர்களைப் பெற்றிருக்கிறது. ஆனால் தரம் (Standard) போதாது என்று எனக்குத் தோன்றுகிறது.

**கேள்வி:** டாக்டர் — எழுத்தாளர்களான ஏ. ஜே. க்ரானின், சாமர்செட் மாம் எல்லாம் டாக்டர்களை வைத்து நாவல் எழுதியிருக்கிறார்கள். நீங்கள் எழுதவில்லையா?

**பதில்:** முழுக்க முழுக்க டாக்டர்களை வைத்து எழுதாவிட்டாலும், என்னுடைய பெரும்பாலான நாவல்களில் ஒரு டாக்டர் வருவார். கிராமத்திலிருக்கிற பணிவான, அன்பான டாக்டராக அவர் இருப்பார். 'இதோ ஒரு இதயம்' என்று ஒரு டாக்டரை ஐடியலிஸ்டிக் காரெக்டராக உருவாக்கி எழுதியிருக்கிறேன்.

**கேள்வி:** கல்கியில் நீங்கள் எழுதிய 'பூக்குழி'யில் கதாநாயகனைப் போலவே இன்னொருவன் இருந்தான் என்ற சுலபமான இரட்டைப் பாத்திரத்தைக் கொண்டு வந்தது நாவலின் முழு வெற்றியைப் பாதித்து விட்டதோ என்று தோன்றுகிறது.

**பதில்:** Identical twins is possible even now. ஒரே மாதிரியான இரட்டையரை எழுதியதில் நாவலின் தரம் குறையவில்லையென்பதே என் அபிப்பிராயம். மேலும் இதில் வருகிற அகல்யாவை எடுத்துக் கொள்ளுங்கள். புராண கால அகல்யாவுக்கும், இந்தப் புது அகல்யாவுக்கும் உள்ள வித்தியாசத்தை நன்றாக எடுத்துக் காட்டியிருக்கிறேன். என் கதைகளில் கெட்டுப் போகிற பெண்களைப் பற்றி நான் எழுத மாட்டேன். படித்திருப்பீர்களே? Modern thinking நடை, உடை எல்லாம் இருக்கும். ஆனால் நான் படைத்த பெண்கள் 'பட்'டென்று விழுந்துவிட மாட்டார்கள்.

**கேள்வி:** உங்களுக்கு ஞானபீட விருது கிடைக்கவில்லையே என்று என்னைப் போன்ற வாசகர்களுக்கு ஒரு குறை உண்டு!

**பதில்:** உங்களைப் போன்ற உண்மையான வாசகர்களின் மனம் நிறைந்த பாராட்டே எனக்கு மிகப் பெரிய விருது மாதிரி!

புகைப்படம் : ராமன் பிரதர்ஸ்

---

**பிடித்தவை:**

அட்டையில் முந்தானையை இழுத்துப் போர்த்திய பெண்களின் படங்களைப் போட்டு விட்டு, உள்ளே இருக்கிற கதைகளிலும், படங்களிலும் அவர்களை ஆடையுரித்துப் பார்த்து சர்க்குலேஷனைச் சில லட்சங்கள் உயர்த்திக் கொள்ளத் தெரியாத முட்டாள்தனம்.

ஒரு பத்திரிகைக்குரிய நடுநிலைமைத் தன்மையோடு தலையங்கங்கள் எழுதித் தொலைப்பதால் எப்போதும் ஆளுங்கட்சியை ஆதரித்தே தலையங்கங்கள் எழுதி, வேண்டிய காரியங்களைச் சாதித்துக் கொள்ளத் தெரியாத பிழைக்கத் தெரியாமை. அவனவன் தன்னுடைய மதத்தைப் பரப்ப லட்சக்கணக்கில் செலவு செய்து கொண்டிருக்கும்போது, 'இந்து மதம்' என்று ஒன்று இருப்பதை நினைவூட்டுகிற மாதிரி ஜகத்குரு சுவாமிகளின் அருள் உரைக்காக ஒரு பக்கமாவது ஒதுக்கி விடுகிற அறியாமை! (அந்தப் பக்கத்தில் நாலு சினிமா துணுக்குகள் போடலாமே!) கேள்வி பதில்கள் பகுதியில், தனது மேதாவித்தனத்தைக் காட்டி, வாசகர்களின் தலையையும் தன்னுடைய தலையைப் போல் தோற்றமளிக்கிற மாதிரி மாற்ற நினைக்காத 'கடுகு' அவர்களின் நல்லெண்ணம். (ஓவியர் நடனத்தின் படங்களைக் கவனிக்கவும்!)

**பிடிக்காதது:**

பிராக்டிகலாக நேரில் மட்டுமே உறுதியாய்க் கற்றுக் கொள்ளக் கூடிய 'கராத்தே'யை, எழுத்து மூலம் கற்றுக்கொடுக்க நினைக்கிற காரியம்!

- இ. முருகவேள், செங்கவல்லி





# "கிசு கிசு என்பது ரசனைக் குறைவான அம்சம்!" — சோ

அரசியல் பத்திரிகையாளர் என்ற முறையில் திரு சோ அவர்களை எழும்பூர் வாசியான கல்கி வாசகர் திரு எம். ஏ. செல்வராஜ்பேட்டி கண்ட போது:

முதல் நாளே தொலை பேசியில் ஒப்புதல் பெற்றுவிட்டது. ஞாயிறு. வாசகர் செல்வராஜ், புகைப்படக்கலைஞர் 'மேகலா' ஆகியோருடன் 'சோ'வின் அலுவலகத்தை அடைகிறோம். அறிமுகம் முடிந்ததும்...

செல்வராஜ்: அரசியலை நீங்கள் தேர்ந்தெடுக்கக் காரணம்?

சோ: என்ன செய்வது? விஞ்ஞானியாக வேண்டுமென்ற ஆசைதான். முடிகிறதா என்ன? உழைப்பும் இல்லாமல் உயரவும் வேண்டும் என்று எண்ணியபோது அரசியல் என் நினைவுக்கு வந்தது. மற்ற தொழில்களுக்கு அறிவு தேவை. அரசியலுக்கு அது தேவையில்லை. இதுவும் ஒரு காரணம்.

செல்வராஜ்: அரசியலில் கட்சி விட்டுக்கட்சி மாறும் கொள்கையை நீங்கள் ஆதரிக்கிறீர்களா?

சோ: ஆம். தனக்குப் பிடித்த கொள்கை பாதிக்கப்படும்போது கட்சி மாறுவது தவறில்லை. ஆனால் ஜெயிக்கின்ற கட்சியில் சேருவதையே தன் கொள்கையாகக் கட்சி மாறுபவர்கள் கொண்டிருக்கக் கூடாது.

செல்வராஜ்: ஜெயிக்கின்ற கட்சியில் சோ சேர்ந்தால் என்ன ஆகும்?

சோ: அடுத்த தேர்தலில் அந்தக் கட்சி தோற்றுப் போகும்.

செ: நம்நாட்டில் ஓட்டுச் சாவடியின் முன் நிற்கும் 'க்யூ'வை விட ரேஷன் கடை 'க்யூ' நீளமாக உள்ளதே?

சோ: நம் மக்களுக்குக் கொடுப்பதை விட எப்போதும் வாங்குவதில்தான் பிரியம் அதிகம். அதனால்தான்.

செல்வராஜ்: வெளிநாட்டு அரசியலைப் பற்றி ஒரு கேள்வி. ஈரானில் இப்போது கோமேனியைச் சந்திக்க நேர்ந்தால் என்ன கேட்பீர்கள்?

சோ: தெரியாத்தனமா ஈரானுக்கு வந்துட்டேன்... நான் பத்திரமா ஊருக்குப் போக ஏற்பாடு பண்ணுங்க ஸ்வாமின்னு கேட்பேன்.

செல்வராஜ்: ஏதேனும் ஒரு பிரச்னையை எழுப்பிவிட்டுத் திடீரென்று மௌனமாகி விடுகிறாரே சோ... ஏன்?

சோ: அந்த மௌனத்தின்போது அடுத்த பிரச்னைக்காக அவர் அலைந்து கொண்டிருக்கிறார் என்று அர்த்தம்.

செல்வராஜ்: பத்திரிகைகள் பற்றிச் சில கேள்விகள்... கிசுகிசுவைப் பற்றி ஒரு கிசுகிசு சொல்லுங்களேன்.

சோ: வெளிப்படையாகவே கூறுகிறேன். கிசுகிசு என்பது ஒரு 'பேட் டேஸ்ட்'.

செல்வராஜ்: பத்திரிகைகளில் செக்ஸை நீங்கள் எதிர்ப்பது உங்கள் பத்திரிகையில் அதை இடம்பெறச் செய்ய இயலாத ஆற்றாமையினாலா?

சோ: இல்லை. நான் நினைத்திருந்தால் எம்.ஓ. மத்தாய் போன்றவர்களின் எழுத்தைப் பிரசுரித்து செக்ஸைத் திணிக்க முடியும். ஆனால் நான் அதை — செக்ஸை பத்திரிகைகளில் விரும்புவதில்லை.

செல்வராஜ்: பிரபல எழுத்தாளர் சுஜாதாவைப் பற்றி?

சோ: கல்கி, தேவன் இவ்விருவர் தவிர பிறர் கதைகளை நான் படித்ததில்லை. எனவே சுஜாதாவின் கதைகளைப் படிக்காமல் 'ரீல்' விட நான் தயாராக இல்லை.

## சில்லறையை மறவாதீர்கள்!

கடையில் கல்கி வாங்கி நோட்டைக் கொடுத்துச் சில்லறை பெறு முன்னரே அவ்வளவு பரபரப்பாகவும் ஆர்வத்தோடும் கல்கியின் எந்தப் பகுதியைப் பிரித்துப் படிக்கிறார் ஸ்ரீமதி ஜானகி ராமநாதன்?

அதை மட்டும் கேட்காதீர்கள்! எதற்கு வீண் போட்டி, பொல்லாப்பு? ஒவ்வொரு வாசகருக்கு ஒவ்வொரு பகுதியை முதலில் பிரித்துப் படிக்கத் தோன்றும். இல்லையா? அந்த ஆர்வத்தில் சில்லறை பெற மறந்தாலும் கடைக்காரர் கூப்பிட்டுக் கொடுத்து விடுவாரே!

மேலட்டை வண்ணப் படம் எடுத்தவர்: பிரபாகர்.

---

செல்வராஜ்: மன்னிக்கவும்.... பத்திரிகை நடத்தும் தொழிலை விட ஒரு டீக்கடை வைத்திருக்கலாமே என நீங்கள் எப்போதாவது சலித்துக் கொண்டதுண்டா?

சோ: இதுவரை இல்லை. ஆனால் சோவே பத்திரிகை நடத்தும்போது நம்மால் நடத்த முடியாதா என்ன என்று டீக்கடைக்காரர் பத்திரிகை தொடங்கினாலும் தொடங்கலாம்.

செல்வராஜ்: வாசகர்களிடம் உங்களால் டைஜஸ்ட் பண்ண முடியாத விஷயம் என்ன?

சோ: பல உண்டு. ஒன்றை மட்டும் சொல்கிறேன். எப்படியும் தன் பெயர் பத்திரிகையில் பிரசுரமாக வேண்டும் என்பதற்காக, ஒருவரே பல பெயர்களில் பலவிதமான கேள்விகளையும் மாறுபட்ட கருத்துக்களையும் எழுதும் பழக்கம் நம் வாசகர்களிடம் வாடிக்கையாக நான் காணும் பெருங் குறை. இதனால் வாசகர்களின் உண்மையான எண்ணங்களை அறிய முடியாமல் போய்விடுகிறது.

செல்வராஜ்: விலைவாசி உயர்ந்துவிட்டது! 'துக்ளக்'கில் சிறந்த கேள்விகளுக்கான பரிசு ரூபாய் ஐந்தைக் கொஞ்சம் அதிகரிக்கக் கூடாதா?

சோ: அதை ஒரு ரூபாய் எனக் குறைக்கலாமா என யோசித்துக் கொண்டிருக்கிறேன்.

செல்வராஜ்: உங்களைப் பற்றி ஒரு கேள்வி. நீங்கள்ஒரு பெரிய ஜீனியஸ் என்கிறார்களே?

சோ: யார் சொல்வது அப்படி?

செல்வராஜ்: மக்கள்.

சோ: சரிதான். ஓட்டுப்போடும்போது மட்டுமல்ல... ஒப்பீனியன் கொடுக்கும்போது கூட நம் மக்கள் தவறு செய்கிறார்கள் என்பது இப்போது எனக்குப் புரிகிறது.

சோ: 'கல்கி'யைப் பற்றி....?

சோ: பத்திரிகைகளுக்கென நான் எழுதத் தொடங்கியபோது என்னுடைய முதல் நாடகமான 'சாதல் இல்லையேல் காதல்' பிரசுரித்ததே கல்கிதான்.

பேட்டி முடிகிறது. 'இன்னும் ஒரே ஒரு கேள்வி' என வாசகர் செல்வராஜ் ஆள் காட்டி விரலை உயர்த்திக் காட்டுகிறார். தலையசைக்கிறார் சோ. ''சார்... உங்கள் தலை ஏன் எப்போதும் மொட்டையாகவே இருக்கிறது?'' என்கிறார் செல்வராஜ். ''மற்றவர்களை மட்டுமல்ல... எனக்கும் மொட்டை அடித்துக் கொள்வது பிடிக்காதுதான்... ஆனால் என்ன செய்வது... திடீரென்று-முடி அனைத்தும் உதிர்ந்து போய்விட்டது'' என்கிறார் சோ.

பேட்டி அமைப்பு: ஜெயம்ஸ்ரீ

---

மக்களுக்குத் தேவையானவற்றில் தலையாயது திரைப்படம் என்ற 'மாபெரும்' உண்மையை உணர்ந்து, கல்கி சமீப காலத்தில் திரைப்படச் செய்திகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கத் தொடங்கியுள்ளது. 'சிவாஜி சகாப்தம் முடிந்து விட்டதா?' போன்ற விவாதம் மக்களின்அறிவை வளர்ப்பதில் ஆற்றியுள்ள பெரும் பங்கை எவராலும் மறுக்க இயலாது.! 'கல்லூரி க்விஸ்' போன்ற பகுதிகளால் பயன் எதுவுமில்லை என உணர்ந்து அவற்றை நிறுத்திவிட்டு, இப்பொழுது மீண்டும் மக்களுக்குப் பயன்தரும் ஸ்ரீவித்யாவின் 'சிந்தனைச் சிதறல்கள்' போன்றபகுதிகள் வெளியாகின்றன. இது போதாதென்று அதிவேகமாக அறிவைவளர்க்கத் 'திரைப்பட ரேஸ்' உதவுகிறது. மொத்தத்தில் 'கல்கி' தனது கடந்த காலத் தவறை உணர்ந்து மக்களின் அறிவை வளர்க்கச் சமீபகாலத்தில் முயன்று வருகிறது

- வே.க. மணியன்



# சென்னையிலிருந்து 160 கி.மீ. தொலைவில் வசிப்பவர்கள் உபயோகிக்கவல்ல ஒரே டிவி



# சாலிடர்

HE/163

நாங்கள் பிரத்யேகமாக தயாரிக்கும் 'ஹை-கெய்ன்' டிவி செட்டுகளும், 'பூஸ்டர்'களுமே இதற்கு காரணம்.

## தெளிவான காட்சி

சென்னையிலிருந்து வெகு தொலைவில் வசிப்பவர்களும் டிவியில் நிகழ்ச்சிகளை கண்டு மகிழ பிரத்யேகமாகத் தயாரிக்கப்படும் 'ஹை-கெய்ன்' செட்டுகளை அளிக்கிறோம். இந்த செட்டுகளுடன் நாங்கள் தயாரிக்கும் 'பூஸ்ட்டர்' கருவியை பொருத்தினால் படக் காட்சிகள் தெளிவாகத் தெரியும். சாதாரணமாகவே சாலிடெர் டிவியில், செய்தி வாசிப்பவரின் கண் இமைகள் போன்ற சிறு அம்சங்கள் கூட துல்லியமாகத் தெரியும்.

## சிறப்பான ஒலி

எல்லா சாலிடெர் மாடல்களும் சீரான ஒலியை அளிக்கவல்ல ஒலிபெருக்கி கொண்டவை. அதுமட்டுமின்றி உங்களது ரெக்கார்டு பிளேயர், டேப் ரெக்கார்டர், ரேடியோ ட்யூனர் போன்றவற்றை இணைக்க எல்லா மாடல்களிலும் வசதி உண்டு.

## சிறப்பான சர்வீஸ்

உங்கள் டிவி எப்பொழுதாவது பழுதடைந்தால், உடனடியாக சர்வீஸ் வசதி அளிக்க காஞ்சீபுரத்தை மையமாகக் கொண்டு ஒரு சர்வீஸ் சென்டர் அமைத்துள்ளோம். இதனால் நீங்கள் டிவி வாங்கிய பின் சர்வீஸ் செய்வதற்கு தாமதமாகுமா என கவலைப் பட வேண்டியதில்லை. வார ஏழு நாட்களிலும் சிறந்த பராமரிப்பு.

**ஹை-பீம் எலக்ட்ரானிக்ஸ் பி.லிட்.,**
சென்னை-600 020. போன்: 413098

**காஞ்சீபுரம் சர்வீஸ் சென்டர்**
439, மகாத்மா காந்தி ரோடு, காஞ்சீபுரம்

# எந்த ஆட்சி, நல்ல ஆட்சி?

''நாடாளுமன்ற ஆட்சி முறையா ஜனாதிபதி ஆட்சி முறையா? எத்தகைய ஜனநாயகம் தேவை? — விவாதம் நடக்கட்டும்'' என்கிறார் பிரதமர்.

ஜனாதிபதி தேர்தல் என்பதையே கேலிக் கூத்தாக்கி யதேச்சாதிகாரம் நடத்தும் ஜனாதிபதிகள் உலகில் நிறையப் பேர் உண்டு. சிறுபான்மை வோட்டு பலத்தில் நாடாளுமன்றத்தில் பெரும்பான்மை பலம் பெற்று அந்தத் துணிவில் சர்வாதிகாரப் போக்கில் நடந்து கொள்ளும் பிரதமர்களும் உண்டு.

எனவே எத்தகைய ஜனநாயகம் என்பதை விட எத்தகையவர்கள் ஆட்சி செய்கிறார்கள் என்பதே முக்கியம். அதைவிட முக்கியம் அவர்கள் எத்தகைய கொள்கைகளைக் கடைப்பிடிக்கிறார்கள் என்பது.

ஆட்சி முறை குறித்து விவாதம் நடத்துங்கள் என்பதற்குப் பதிலாக ''சுதந்திரப் பொருளாதாரமா? கட்டுப்படுத்தப்பட்ட பொருளாதாரமா? எது சிறந்தது?'' என்று விவாதம் நடத்துமாறு பிரதமர் கூறியிருந்தால் அர்த்தமுண்டு. இன்னமும் தெளிவு பிறக்காமல் நாம் பேசிப் பேசியே காலத்தைக் கழிக்கையில் மற்ற மற்ற நாடுகள் வெகு வேகமாக முன்னேறிப் போய்க் கொண்டிருக்கின்றன.

சுதந்திரப் பொருளாதாரமே சாலச் சிறந்தது என்பதற்கு ஜப்பான், மேற்கு ஜெர்மனி போன்று எத்தனையோ முன்னுதாரணங்கள். அவற்றை விடுங்கள்; இருபது ஆண்டுகளுக்கு முன்பாகத்தான் சுதந்திரம் பெற்ற இரு ஆப்பிரிக்க நாடுகளைக் கவனியுங்கள்.

கென்யா டான்ஸானியா ஆகிய அண்டை நாடுகள் ஒரே சமயத்தில் சுதந்திரம் பெற்றன. கென்யா முதலாளித்துவம் என்று பழித்துரைக்கப்படும் சுதந்திரப் பொருளாதாரத்தை மேற்கொண்டது. டான்ஸானியா சோஷலிஸம் என்று போற்றப்படும் அடிமைப் பொருளாதாரத்தை மேற்கொண்டது. இருபது ஆண்டுகளில் கென்யா வியக்க வைக்கும் வேகத்தில் ஓகோகோ என்று வளர்ச்சியுற்று விட்டது. மேலும் வளர்ந்து வருகிறது. டான்ஸானியாவிலோ, 'நமக்கென்ன வந்தது' என்பது போன்ற ஒரு அலட்சிய பாவம் எல்லாத் துறைகளிலும் நிலவி, தேக்க நிலையே காணப்படுகிறது. இரு நாடுகளும் சுதந்திரம் பெற்று சில காலத்துக்குள் — 1964ல் — கென்யாவின் தேசிய உற்பத்தி டான்ஸானியாவின் உற்பத்தியை விட 16 சதவீதம் அதிகமாயிருந்தது. 1977ல் இந்த வித்தியாசம் முப்பது சதவீதத்துக்கு உயர்ந்து விட்டது! இன்று கென்யா மக்கள் டான்ஸானியா மக்களை விட இரு மடங்கு அதிகமான கார்களை ஓட்டுகிறார்கள்; இரு மடங்கு அதிகமான டெலிஃபோன்களை வைத்திருக்கிறார்கள்; இரு மடங்கு அதிகமான எஃகையும் மின்சாரத்தையும் பயன்படுத்துகிறார்கள். பிரமிப்பிலாழ்த்தும் இத்தகைய வித்தியாசங்களை மேலும் விரிவாகப் புள்ளி விவரங்களுடன் ஒரு கட்டுரையில் பிட்டுப் பிட்டு வைக்கிறது ஜூலை மாதத்திய ரீடர்ஸ் டைஜஸ்ட்.

ஆக, பிரதமர் எழுப்பியுள்ள கேள்விக்குப் பதில் இதுதான்: நாடாளுமன்ற ஜனநாயகமோ அல்லது ஜனாதிபதிமுறை ஜனநாயகமோ எதுவானாலும் அது மக்களின் சுதந்திரங்களைப் பூரணமாக மதிக்கும் ஜனநாயகமாக இருக்கட்டும். முப்பது ஆண்டுகளுக்கு மேலாகக் கடைப் பிடித்துப் பார்த்தும் பயன் தராத வறட்டுக் கொள்கைகளை வீண் ஜம்பத்துக்காகத் தொடர்ந்து பின்பற்றாமல், யதார்த்தப் போக்கில் நடந்து கொள்ளும் நல்லறிஞர்கள் தலைமை ஏற்று நடத்திச் செல்லும் ஜனநாயகமாக விளங்கட்டும். விவாதங்களையே வளர்க்கும் ஜனநாயகமாய் இராமல் செல்வத்தை, சுபிட்சத்தை வளர்க்கும் ஜனநாயகமாகச் சிறக்கட்டும்.

1980 நவம்பர் 23
ரௌத்திரி கார்த்திகை 8
மலர் 39 : இதழ் : 17



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# ஆழியில் அணைத்த விளக்கு

மகரிஷி

## அத்தியாயம் 3

சுமங்களா வீட்டை நெருங்கியபோது வாசலில் பரமேசுவரனின் மோட்டார்சைக்கிள் நிற்பதைப் பார்த்தாள். உள்ளே நுழையும்போதே என்றுமில்லாமல் அவனைப் பார்த்துப் புன்னகை செய்தாள்.

இதை அவள் தன் மனத்தின் பூரணமான அங்கீகரிப்புடன் செய்தாள் என்று சொல்ல முடியாது.

அவனை முழுமையாகத் திரஸ்காரம் செய்யக் காரணம் அவளிடத்தில் இந்நேரம் வரையில் இல்லை. எப்படி அவனை வெறுக்க அவளிடத்தில் காரணம் இல்லையோ அதே மாதிரி அவனை முழுமையாக அங்கீகரித்துக் கொள்ளவும் மனம் தயாராக இல்லை. அவனை விரும்ப அவளிடத்தில் இனியும் ஏதோ உயர்ந்த தகுதி யொன்றை மனம் எதிர் பார்க்கிறது.

அந்தத் தகுதி என்ன?

அந்தரங்கமான அன்பா?

இல்லை....

அந்தரங்கமான நேசிப்பு...

அன்புக்கும் நேசிப்புக்கும் நடுவேயுள்ள வித்தியாசங்களை அவள் மனம் மெதுவாகப் புரிந்து கொள்ளத் தலைப்பட்டு விட்டது.

இதைத்தான் அவள் அவனிடம் எதிர் பார்த்தாள். அது தன்னிடத்தில் இருப்பதாக ஓரிடத்தில்கூட அவன் வெளிக்காட்டவில்லை.

ஒருவேளை அவனை இன்னும் அதிகம் நெருக்கமாகத் தெரிந்து கொண்டால் அது வெளிப்படுமோ? எட்ட இருந்து எடை போடுவதால் அன்பின் தாரதம்மியங்களைப் புரிந்து கொள்ளாமல் இருக்கிறோமோ?

பார்க்கலாம்!

கோமதிகூடக் கேட்டாளே...

'அவனை வெறுக்க ஏதேனும் தனிப்பட்ட காரணங்கள் இருக்கிறதா?' என்று.

அவனை வெறுக்கவும் காரணம் இல்லை. விரும்பவும் காரணம் இல்லை.

இந்த நடுநிலைமை எத்தனை நாளைக்கு நீடிக்க முடியும்?

பரமேசுவரனை அருணாசலத்துக்கும் பர்வதத்துக்கும் பிடித்திருக்கும் காரணம் வேறாக இருக்கலாம். அவனிடத்தில் உள்ள வசதிகள் அவர்களைக் கவர்ந்திருக்கலாம்.

பெண்களைக் கவர முதலில் தேவைப்படுவது மனோநிலையின் அங்கீகாரம். அதன் பின் உண்டாகிற திருப்தி.

மற்றவைகளெல்லாம் இரண்டாம் பட்சமே.

அருணாசலத்துக்கும் பர்வதத்துக்கும் அவனுடைய பாங்க் பாலன்ஸ் முக்கியம்...

ஆனால்...

'எனக்கு....?'

கோமதியிடம் பேசிவிட்டு வந்த பின் அவள் மனம் பக்குவமடைந்த மாதிரி இருந்தது.

'நாம் யாரையும் முதலில் ஒரேயடியாக வெறுக்கவும் அவசியமில்லை..மனத்தின் அங்கிகாரம் இல்லாமல் விரும்பவும் அவசியமில்லை.'

அவள் முதல் முதலில் பிரசன்னமானதொரு புன்னகை செய்தவுடன் பரவசமடைந்த பரமேசுவரன் அவளை வரவேற்பவன் போல எழுந்து நின்றான்.

''உன்மேல் மிகவும் குறைபட்டுக்கொள்கிறார்...! நீ அவருடன் மனம் விட்டுப் பழக மாட்டேன் என்கிறாயாமே?''

வீட்டுப் பிராணிகளைச் செல்லமாகக் கண்டிப்பது போல் பர்வதம் கடிந்து விட்டு உள்ளே போய்விட்டாள்.

''அப்படி யெல்லாம் ஒன்றும் இல்லை'' என்றவள், ''மெதுவாக வளரும் அன்புதான் ஆழமாக வளரும். இது எல்லாருக்கும் எல்லாவற்றுக்கும் பொருந்தும் இல்லையா?'' பரமேசுவரனைப் பார்த்து வசீகரமானதொரு புன்னகை புரிந்தாள்.

பரமேசுவரன் அந்தச் சிரிப்பில் அப்படியே உருகிப் போனான். அவன் வீட்டின் உள் கூடத்தில் அமர்ந்திருந்தான்.

''சுமங்களா... பிளாஸ்கில் காப்பி இருக்கு. அவருக்குக் கொடுத்துட்டு நீயும் குடி... இதோ வந்திடறேன். மயிலாப்பூர்வரை போயிட்டு வரணும்'' என்று சுமங்களாவிடம் சொன்னவள் அப்படியே அவனைப் பார்த்து, ''தம்பி! அவரு வர நேரமாகும். அப்படியே பேசிக்கிட்டு இரு'' என்றாள்.

அவர்களுக்குள் என்ன சங்கேதமோ? பர்வதம் வெளியே புறப்பட்ட அவசரம் சுமங்களாவுக்கு எரிச்சலூட்டியது.

யாருடைய பதிலுக்காகவும் காத்திருக்க வில்லை. வெளியேறிவிட்டாள் அவள்.

இந்தத் தனிமை வேண்டுமென்றே உள் நோக்கத்துடன் உண்டாக்கப் பட்டிருக்கிறது.

வேறு வழியின்றி அவனுடன் அவள் அங்கே இருக்கும் வரையில் பேசியே ஆக வேண்டும்.

''காப்பி.''

காப்பி டம்ளரை அவன் முன் நீட்டினாள். அவளைப் பார்த்துக் கொண்டே அதை வாங்கிக் கொண்டான். இம்மாதிரி சந் தர்ப்பங்களில் கையை உரசுவதற்கும், தற் செயல் ஸ்பரிசத்துக்கும் இடமேற்படத் தான் வாய்ப்புத் தந்துவிடக் கூடாது என்கிற முன் ஜாக்கிரதையுடன் அதைத் தவிர்த்துக் கொண்டான்.

அவன் உள்ளத்தினுள் தென்றலாகப் புகுந்து அசாதாரணமான காதல் கிளு கிளுப்பை அவள் உண்டாக்கவில்லை. அவ னுடைய ஒவ்வொரு பார்வையிலும் சாதா ரண இச்சைகளுடன் அலையும் இளம் வய தினளையே பார்த்தான். அவள் பேச்சிலே மிகச் சாதாரணமான, அதிகமான கல்வி கேள்வி அறிவின் முதிர்ச்சியே இல்லாத தன்மைகளையே கேட்டான்.

சராசரிக்கும் கீழே வளர்ந்துவிட்ட பெண்ணாக இருந்திருந்தால் இந்தத் தகுதிகளினாலேயே கூட அவள் திருப்தி யடைந்திருப்பாள். ஏழைமை, கல்யாணம், ஏதோ ஒரு வகை வாழ்க்கை வருவதைப் பிராப்தம் என்று எண்ணிக் கொள்வதாக இருந்திருந்தால்... இதுவே அதிகபட்சம்தான்.

புறநிலையில் கமலா ஓர் ஏழை. தன் உறவினருக்கும் அப்பால்... அநாமதேயமான நிலையில் யாருடைய பராமரிப்பிலோ வாழ் கிற அநாதை! இன்றுவரை எதற்குமே அவர் களுடைய கையை எதிர்பார்த்துத்தான் நிற்க வேண்டியிருக்கிறது. காலையில் பல் துலக்கும் டூத் பிரஷ்ஷிலிருந்து மாலையில் ஒரு முழம் பூ வாங்கிச் சூடிக்கொள்வது வரை எல்லாம் அவர்கள் காசுதான். இல்லை யென்று சொல்லவில்லை.

ஆனால்,

அகத்தில்....

ஓர் அபூர்வ குணமுள்ளவளாகத் தன்னைப் பாவித்துக் கொண்டிருந்தாள். தன் மனநிலைக்கும், அறிவுக்கும் பரமேசுவரன் சரியானவனாக இருக்க மாட்டானே என்று கருதினாலும் அவனை முழுமையாகத் திரஸ்



காரம் செய்ய ஒரு சரியான முகாந்திரம் கிடைக்கவில்லை.

அன்புக்கு அடிப்படை இல்லாதபோது, வெறுப்புக்கு எங்கே அடிப்படை?

இரண்டுமே இல்லாதபோது,

யாரைக் குறை கூற முடியும்?

ஏன் குறைகூற வேண்டும்?

மனித மனத்தின் விருப்பு வெறுப்புக்களை எடுத்த எடுப்பில் சந்தேகிப்பது நல்ல இல்லையே!

கோமதியும் இதைத்தானே கூறினள். பார்வதம் ஒருபுறம் இருக்கட்டும். 'அவளை வெறுப்பதற்கு உன்னிடம் 'தனிப்பட்ட காரணம் ஏதேனும் இருக்கிறதா?' என்று கேட்டாளே கோமதி!

ஒன்று: பிறரை நாம் புரிந்துகொள்ள வேண்டும். இரண்டு: பிறர் புரிந்துகொள்ள நம்மை நாம் சரியாக வெளிப்படுத்திக் கொள்ள வேண்டும்.

இரண்டும் இல்லையெனில் என்ன அர்த்தம்?

அவன், காப்பியைக் குடித்து முடித்து, டம்ளரை டீப்பாயின் மேல் வைத்துவிட்டு அவள் முகத்தையே பார்த்தான்;

''நான் உங்களுடன் தனிமையில் நிறையப் பேச வேண்டும். உங்களுக்கு எப்பொழுது அவகாசம் கிடைக்கும்?'' — அவன் துணிந்து கேட்டு விட்டான்.

''ஏன் இப்பொழுதே பேசலாமே... இப்படியே தனிமையில்தானே இருக்கிறோம்.''

''இப்படிப்பட்ட தனிமை அல்ல. நிறைய மனம் விட்டுப் பேசக் கூடிய தனிமை.

---

கல்கியை ஒட்டுமொத்தமாகப் பாராட்ட வேண்டுமென்று கண்ணில் விளக்கெண்ணெய் விட்டுக் கொண்டு பார்த்தால் குறைகள்தான் தெரிகின்றன. என்ன செய்வது? நீங்கள்தான் குறை கூறவும் லைசென்ஸ் கொடுத்து விட்டீர்களே!

அதனால் இதோ குறைகள்:

1) தலையங்கத்தைக் கூட வஞ்சப் புகழ்ச்சியணியில் எழுதி, நமது அரசியல் வாதிகளின் அறிவுத்திறனைச் சோதிப்பது! (உதாரணம்: மாருதி)

2) காஞ்சிப் பெரியவர்கள் போன்ற பெரியவர்களின் அருள்வாக்குகளை வெளியிட்டு, தந்தை பெரியாரின் சீடர்களின் பொறுமையைச் சோதிப்பது!

3) கராத்தே பயிற்சி மூலம் இளந்தலைமுறையினருக்குத் தற்காப்புப் பயிற்சியைத் தந்து, பேட்டை ரவுடிகளின் பெருமையைக் குறைப்பது!

4) உணவில் கடுகு அளவோடுதான் இருக்க வேண்டும் என்பதால் கடுகு பதிலையும் அடிக்கடி குறைப்பது!

5) திரு கண்ணதாசனின் புகழைக் குறைக்க அவர் எழுத்தைக் கடைசியில் போடுவது! (அவர் எழுத்துத்தான் மனதில் முதலில் நிற்கிறது என்று தெரியாமல்!)

கே. அனுஷாதாஸ், சென்னை-20



''நீ எங்கே கூப்பிட்டாலும் வருகிறேன்.''

''நாளைக்கு நாம் மகாபலிபுரம் வரை போய் வரலாமா?''

''நான் தயார்!''

அவன் சந்தோஷப்படுகிற மாதிரி அவனைப் பார்த்து அவள் புன்னகை செய்தாள்.

''பார்வதம் என்னைப் பற்றி எல்லாம் சொல்லியிருப்பாள் என நினைக்கிறேன்.''

''எல்லாவற்றையும் என்றால்?''

''எனக்கும் பார்வதத்துக்கும் உள்ள உறவு முறை; எனக்கும் இந்த வீட்டுக்கும் உள்ள பந்தம்; இந்த வீட்டில் உள்ளவர்களுக்கு நான் செய்தே ஆகவேண்டிய செய் கடன்... இப்படி எவ்வளவோ இருக்கின்றனவே!''

''அவள், உன்னைப் பற்றிய விவரம் எதையுமே இதுவரை சொன்னதில்லை. ஆனால், தன் வளர்ப்புமகள் என்று கூறியிருக்கிறாள்.''

''அதை நீங்கள் அப்படியே நம்பினீர்களா?''

''நம்பக் கூடியது... நம்பக் கூடாதது என்பதெல்லாம் உங்களைப் போன்ற பெண்களிடத்தில் எனக்கு ஒன்றுமே இல்லை. இவ் விஷயங்களில் நான் அதிக ஆழமாகத் தெரிந்துகொள்ள விரும்புவதில்லை'' என்று அவனும் சிரித்துக் கொண்டே கூறினான். அந்தச் சிரிப்பு மிகவும் வசீகரமாக இருந்தது.

விளக்கின் பிரகாசமான சுடர் போல மனத்தைப் பளிச்செனச் சுடுவதை உணர்ந்தாள் அவள்.

இந்தச் சிரிப்பென்ன இப்படி இருக்கிறது? இதென்ன சிரிப்பு? ஆளை அப்படியே மயக்கி மடியில்போட்டுக் கொள்ளும்படியான சிரிப்பு! இதில் கொஞ்சம் சபல புத்தி உள்ளவர்களாக இருந்தால் போதும். அப்படியே விழுந்துவிட வேண்டியதுதான்.

கமலங்களா தனக்குள் நாணப்பட்டுக் கொண்டாள். அவனுடைய சாதாரணச் சிரிப்பே தன் சிந்தனைகளைச் சில கணங்கள் பாதிக்கும்படி விட்டதற்கு வேதனைப்பட்டுக் கொண்டாள்.

''நம்பக்கூடியது நம்பக் கூடாதது என்பதெல்லாம் பற்றி உங்களைப் போன்ற பெண்களிடத்தில் எனக்கு ஒன்றுமே இல்லை என்கிறீர்களே... அதன் முழுமையான அர்த்தம் கொஞ்சம் வேறு மாதிரியாகத் தொனிக்கும்போல் இருக்கிறதே!''

''எல்லாவற்றுக்கும் மற்றொரு எதிர் மறையான அர்த்தமும் உண்டு. அது அவர்கள் எடுத்துக்கொள்ளும் கோணத்தைப் பொறுத்தது.

''நீங்கள் அழகாகச் சுற்றி வளைத்துப் பேசி எதிராளியை ஓரளவு குழப்பவும் கற்றுக் கொண்டிருக்கிறீர்கள். உங்களை ஒரு சுடர் என்று நினைத்து அருகில் வந்தால் வெளிச்சம் தருவீர்களா? சுடுவீர்களா?''

அவள் கண்ணாடி முன் நின்று தன் தலை முடியைக் கோதிப் பின்னிக் கொண்டாள். இரண்டு ஹேர் பின்களை எடுத்து இடப்புறமும் வலப்புறமும் பின் தலையின் அடிப் பாகத்தில் குத்திக் கொண்டிருக்கும்போது, அவன் — அவளருகில் வந்து நின்று கொண்டான். பிறகு இமைக்கும் நேரத்தில் அவளைப்

## விட்டுப்போன கட்டங்கள்

எத்தனை நாவல்கள் படித்திருப்பீர்கள், எத்தனை எழுத்தாளர் பெயர் அறிந்து வைத்திருப்பீர்கள்! விட்டுப்போன கட்டங்களைப் பூர்த்தி செய்து பாருங்களேன்? முடியாவிட்டால் விடைக்கு 61 ஆம் பக்கம் பாருங்கள்.

| | | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| (1) க் | ○ | (2) வ | ○ | ன் | (3) கா | த | ○ | ■ | ■ | ■ | ■ | ○ | (4) யா | வ | ○ | (5) ம் |
| ரை | ■ | ண் | ■ | ■ | த | ■ | ■ | ■ | ■ | ■ | ■ | ■ | ○ | ■ | ■ | ○ |
| ○ | ■ | ○ | ■ | ■ | ○ | ■ | ○ | ம் | ○ | ஜ் | யு | ○ | சா | ○ | பு | ம |
| த | ■ | ர் | ■ | ■ | து | ■ | ■ | ■ | ■ | ■ | ■ | ■ | கு | ■ | ■ | ○ |
| ○ | ■ | ○ | ■ | ■ | ○ | யு | சி | ○ | ம் | ○ | த் | ப | ■ | ■ | ■ | பெ |
| ழ | ■ | ழ | ■ | ■ | (7) தீ | வு | ○ | ன் | ■ | (6) ஜெ | ○ | கா | ○ | த | ன் | ■ |
| ○ | ■ | வி | ■ | ■ | ○ | ந் | த | ன் | ■ | (8) க | ன் | ○ | கா | ○ | ய | மோ |
| க | ■ | ■ | ■ | ■ | னி | ■ | (9) தீ | ○ | ச் | ○ | ற் | ற | ○ | ப | ல | ○ |
| ○ | ■ | ■ | ■ | ■ | லீ | ■ | ■ | ■ | ■ | ற் | ■ | ■ | ■ | ■ | ■ | ■ |
| ■ | ■ | ■ | ■ | ■ | ■ | ■ | ம | ■ | (10) ந | ○ | ச் | ○ | மீ | ர் | ○ | தி |
| (11) பா | ○ | வி | ○ | க் | கு | ■ | ○ | ■ | ■ | (12) ய | வ | ○ | ரா | ○ | ■ | ■ |
| ■ | ர | ■ | ■ | ■ | ■ | ■ | ர | ■ | ■ | ன் | ■ | ■ | ■ | ■ | ■ | ■ |
| ■ | ○ | வி | ல | கு | (13) கை | ■ | (14) நா | ○ | க் | ○ | ர் | ம | ○ | க | ன் | ■ |
| (15) மோ | க | ○ | ன் | ■ | ■ | ■ | ○ | ■ | (16) வெ | ன் | ○ | கா | க் | ○ | க | ன் |
| ■ | ள | ■ | ■ | ○ | ஜா | ○ | கி | ○ | ம | ன் | ■ | ■ | ■ | (18) சு | ○ | தா |

1. எல்லாருக்கும் காதலி இருந்தால் இவனுக்கு மட்டும் இருக்கக்கூடாதோ என்று 'கல்கி' நினைத்திருப்பார் போலிருக்கிறது!
2. சா. கந்தசாமி உருவாக்கி அழித்த காடு.
3. 'மூக்கைப் பார் மூக்கை, மோர் தகப் மாதிரி!' என்று பிரசித்தி பெற்ற மூக்கை இவரது மனைவியே கிண்டல் செய்திருக்கிறான்!
4. சிதம்பர ரகுநாதன் படைத்த இந்த நாவலின் தலைப்பைக் கடைசியிலிருந்து படித்தால்தான் உண்டு. (நாவலே அல்ல)
5. இந்திரா பார்த்தசாரதி நாலு பக்கமும் தண்ணீர் சூழ, கல்கியில் எழுதிய நாவல்
6. அண்மையில் ரஷ்யப் பரிசு பெற்ற புகழ் மிக்க படைப்பாளி.
7. 'பாலும் பாவையும்' படைத்த இந்த அமரரை யார் மறந்திருக்க முடியும்?
8. மு. வ. எழுதிய போதையூட்டும் நாவல்
9. பரிசு வாங்கிய சரித்திர நாவல்.
10. இவர் எழுதாத புதுக் கவிதையா, சிறுகதையா, நாவலா!
11. அகிலன் 'கல்கி'யில் ஏற்றியது. பிறகு திரையிலும் சுடர் விட்டது.
12. சாண்டில்யன் முடி சூட்டிய சுதாபாத்திரம். நாவல் தலைப்பே அவன்தான்.
13. ஜெயகாந்தன் கல்கியில் எழுதிய குறு நாவல் சிதறிக் கிடக்கிறது.
14. 'லக்ஷ்மி'யின் புகழ் பெற்ற 'குழந்தைகள்
15. இந்த முள் குத்தினால் வலியிருக்காது. ஆனால் தாபம் இருக்கும்!
16. ஆர். கண்ணன் 'பிடித்த'வை.
17. 'நளபாகம்' படைக்கும் எழுத்தாளர்.
18. இவர் எழுதாத பத்திரிகைகள் ஏதேனும் தமிழில் இருக்கிறதோ?

### மேலிருந்து கீழ்:

1. அசோகமித்திரனின் நாவல், திரைப்படத் துறையைப் பின்னணியாகக் கொண்டது.
2. 'செம்பியன்' சமீபத்தில் வழங்கிய படைப்பு.
3. பாரதி பாட்டில் ஒரு வரிதான், நாவல் தலைப்பு நினைவில்லையோ?
4. கோவி. மணிசேகரனுக்குப் பரிசு வாங்கிக் கொடுத்த நாவல் — திரைப்படமாகவும் வருகிறது.
5. 'லக்ஷ்மி'யின் மற்றொரு மகத்தான நாவல் கடைசி எழுத்திலிருந்து ஆரம்பமாகியிருக்கிறது இங்கே!
6. சரித்திரக் கதையா, சமூகக் கதையா, எதிலும் சக்கைப் போடு போட்டவர்!
7. மூன்றெழுத்துக்காரர் கல்கியில் வழங்கிய நவீனம்.
8. கூழாங்கல் மாதிரி ஒரு கல் கிடைக்கப் போக, வாசகர்களை ராவிமுக்குக்கு வரவழைத்துவிட்டார் இதன் ஆசிரியர்.

---

பின்புறம் ஆலிங்கனம் செய்து கொண்டு தோள் பட்டையில் முகத்தை வைத்து நுகர்வது போல் சாய்ந்தான்.

இதை அவள் கொஞ்சம் கூட எதிர்பார்க்கவில்லை. அவனுடன் பேசி அவனுடைய மனநிலையைக் கொஞ்சம் புரிந்து கொள்ள எண்ணினாள். அவனோ, ஆரம்பம்முதலே ஒரு புதிர் போலப் பேசினானே தவிர, 'பளிச்'செனத் தன்னை எந்த இடத்திலும் வெளிக்காட்டிக் கொள்ளாமலே இருந்தான். கடினமான கேள்விகளுக்கு வசீகரமாகச் சிரித்தான். உண்மையைத் தேடும் கேள்வியொன்றைக் கேட்டபோது, இதோ. உணர்ச்சிகளைத் தூண்டுகிறான்.

அவனுடைய பௌருஷமான உடம்பின் ஆலிங்கனமும், தோள் பட்டையில் பதிந்த உதட்டின் தங்கு தடையற்ற பயணமும்... ''விடுங்கள்... என்ன இதெல்லாம்?''

அவள் விலகிக்கொள்ள முயன்றாள்.

இம்மாதிரி நேரங்களில் புதுப் பெண்களின் மனோபாவமும் அவர்கள் காட்டும் எதிர்ப்பும் அவனுக்குத் தெரியும். (தொடரும்)

# வளமைக்கு வழிகாட்டி

நாளை வரும் எதிர்காலத்துக்கு
சேமிப்பது ஒன்றே வளமைக்கு
வழிகாட்டியாகும்.
உங்கள் சக்திக்கும்,
தேவைக்கும் ஏற்ப பலவேறு
சேமிப்புத் திட்டங்களை
நாங்கள் உருவாக்கி
உங்கள் வளமைக்கு
வழி காட்டுகிறோம்.

உங்களுக்கு உகந்த
ஒரு திட்டத்தை
தேர்ந்தெடுத்து சேமித்து
வளம் பெற்றிடுவீர்.




உங்கள் ஒளிமயமான
எதிர்காலத்திற்கு
ஓர் உற்ற வழிகாட்டி



## கரூர் வைஸ்யா பாங்க் லிமிடெட்.

பதிவு அலுவலகம்: கரூர்-639 001

அன்னிய செலாவணி வர்த்தகம் செய்ய
அனுமதி பெற்றவர்கள்

K.V. ராகவாச்சாரி
சேர்மன்

எமது பம்பாய் அலுவலகம்:
"சாமி சேம்பர்ஸ்" 365-367, நர்சி நாதா தெரு, மஸ்ஜித் பந்தர்,
தபால் பெட்டி நெ. 4254 மாண்ட்வி, பம்பாய்-400 009.

எமது கல்கத்தா அலுவலகம்:
213-D, மகாத்மா காந்தி சாலை 2வது மாடி, கல்கத்தா-700 007.

PADA-KVB 109

வாழ்வில் வளம் பெருக்கும் எங்கள்
சேமிப்புத் திட்டங்கள்:

- திருமகள் திருமணத் திட்டம்
- சூர்யோதயா சேமிப்புத் திட்டம்
- ஜம்போ சேமிப்புத் திட்டம்
- தேனி சேமிப்புத் திட்டம்
- ரொக்கப் பத்திரங்கள்

இந்திரா பார்த்தசாரதி

# ஆகாயத் தாமரை



3

வாசல் மணியின் ஸ்வரங்கள் சிதறின.

சோபாவில் சாய்ந்து கொண்டு அரைத் தூக்கத்தில் ஆழ்ந்திருந்த விம்மி எழுந்திருந்தாள்.

இதற்குள் பூர்ணிமா வாசலுக்குச் சென்று கதவைத் திறந்தாள்.

மிஸஸ் பரோட்.

''என்ன விம்மி, தூக்கமா? புறப்படவில்லையா?''

விம்மி ஞாபகத்துக்கு வந்தது. 'இன்டர் நாஷனல் சென்டரு'க்குப் போக வேண்டும். அருண் சிநேகிதர்களுடைய மனைவிகளுடன் மாதந்தோறும் ஒரு முறை செய்தாக வேண்டிய சடங்கு. மத்தியானம் சிற்றுண்டி, வம்பளப்பு. அவளுக்குப் பிடிக்காத காரியம். அருணுக்காகச் செய்தாக வேண்டும். இல்லாவிட்டால், அவனை 'அன் சோஷல்' என்று சொல்லி விடுவார்களாம்.

''ஐந்து நிமிஷம் கொடுங்கள். புறப்பட்டு விடுகிறேன்'' என்று கூறிக்கொண்டே உள்ளே சென்றாள்.

அவள் மாற்றுடை தரித்துக் கொண்டு வெளியே வந்ததும், மிஸஸ் பரோட் சொன்னாள்: '' 'லவ்லி'... நாங்களெல்லாம் அரை மணி நேரம் 'மேக்-அப்' செய்துகொண்டால் தான் பார்ப்பதற்குச் சற்றுச் சுமாராக இருப்போம். நீங்கள் எப்படி வந்தாலும்....''

''போகலாமா?''

மிஸஸ் பரோட் சொல்வதுவாஸ்தவம்தான். ஐம்பது வயதில் இவளுக்கு எவ்வளவு 'மேக்-அப்'! இயற்கையை வெல்ல என்ன தீவிரமான பிரயத்தனங்கள்!

அவள் காரில் போய் உட்கார்ந்தாள். மிஸஸ் பரோட் காரைக் கிளப்பினாள்.

இன்னும் இரண்டு மணி நேரம் இவர்களுடன் சந்தோஷமாக இருப்பது போல் காட்டிக் கொள்ள வேண்டும். மிஸஸ் மல்ஹோத்ரா அடிக்கப் போகின்ற 'ஜோக்'குகளுக்கெல்லாம் சிரித்தாக வேண்டும். மிஸஸ் மல்ஹோத்ரா அருண் வேலை பார்த்த தொழில் நிறுவனத்தின் துணைத் தலைவரின் மனைவி. ஒவ்வொரு தடவையும் சொன்ன 'ஜோக்கு'களையே திருப்பிச் சொல்வாள்... இவர்களால் எப்படிச் சகித்துக் கொள்ள முடிகிறது?

'சென்டரி'ல் இவர்கள் உட்காருவதற்கென்று இடம் 'ரிஸர்வ்' ஆகியிருக்கும். ஒவ்வொருவரும் எங்கே உட்கார வேண்டும் என்ற கட்டுப்பாடு வேறு... 'மை காட், ஹௌ ஐ ஹேட் இட்!'

'லௌஞ்சில்' நுழைந்ததும், அதற்குப் பொறுப்பாக இருந்த வீரேந்தர் அவர்களைப் பார்த்துப் புன்னகை செய்தான்.

எல்லாரும் அவரவர்இடத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள்.

''யு ஆர் லேட்'' என்றாள் மிஸஸ் மல்ஹோத்ரா.

வீரேந்தர் 'மெனு-கார்டை'க் கொண்டு வைத்தான். கையில் குறிப்புப் புத்தகத்தையும் பென்சிலையும் எடுத்து வைத்துக்கொண்டான்.

''எனக்குக் காப்பி போதும்'' என்றாள் விம்மி.

''நோ... மை டியர்... இட்ஸ் அன்ஃபேர்.... நாங்கள் வரிந்து கட்டிக்கொண்டு சாப்பிடப் போகிறோம். நீங்கள் மட்டும் இந்த வேடிக்கை பார்த்துக் கொண்டு காப்பி குடிப்பது நியாயமா?'' என்று கேட்டாள் மிஸஸ் கன்வர்.

''எனக்குப் பசியே இல்லை.''

''ஓ!... கன்கிராட்ஸ்... இதுஎந்த மாதம்!'' என்றாள் மிஸஸ் மேஹரா.

எல்லாரும் சிரித்தார்கள். விம்மியின் முகம் லேசாகச் சிவந்தது. நாணத்தால் அல்ல. 'வில் யு ஷட் அப்?' என்று கத்த வேண்டும் என்ற ஆவேசம். சமாளித்துக் கொண்டாள்.

''யு ஆர் ராங்... இப்பொழுதுதான் நன்றாகப் பசிக்கும்... உங்களுக்கு மறந்துபோய் விட்டது போலிருக்கிறது, மிஸஸ் மெஹரா. உங்கள் கடைசிப் பெண்ணுக்குப் பதினைந்து வயது ஆகிறது அல்லவா!'' என்றாள், மிஸஸ் சாக்ஸேனா.

'' 'கடைசி' என்று எப்படிச் சொல்ல முடியும்?'' என்றாள் மிஸஸ் தல்வார்.

மறுபடியும் சிரிப்பலைகள்...

''எனக்கு ஒரு 'ஜோக்' ஞாபகத்துக்கு வருகிறது'' என்றாள் மிஸஸ் மல்ஹோத்ரா...

''சொல்லுங்கள்'' என்று இரண்டு மூன்று குரல்கள்.

வீரேந்தர் குரலை இலேசாகக் கனைத்துக் கொண்டான்.

''எனக்குக் காப்பி மட்டும் போதும் வீரேந்தர்'' என்றாள் விம்மி உறுதியான குரலில்.

''ஓ.கே.... எனக்கு சைனீஸ் சூப்..... கோஃப்தா... மஷ்ரும் ஆன் தி டோஸ்ட்... காஃபி...'' என்றாள் மிஸஸ் பரோட்.

வீரேந்தர் எழுதிக் கொண்டான்.

மற்றவர்களும் அவரவர்களுக்கு வேண்டியவற்றைச் சொன்னார்கள்.

'' 'ஜோக்', 'தி ஜோக்'... மிஸஸ் மல்ஹோத்ரா'' என்றாள் மிஸஸ் தல்வார்.

''அமெரிக்கப் பெண் ஒருத்தி லண்டனுக்கு வேலை விஷயமாகப் போயிருந்த அவள் கணவனுக்கு அன்று அவன் பிறந்த நாள் என்பதால் பத்து பாஷை பேசும் ஒரு கிளியைப் பரிசாக அனுப்பினாளாம். அந்தக் கிளியை நண்பர்களிடம்காண்பித்துத் தனக்கு பாராட்டு அனுப்பப் போகிறான் என்று அவள் காத்திருந்தாள். அவன் அவளுடன் ஃபோனில் தொடர்பு கொண்டு சொன்னானாம்... 'இட் வாஸ் வெரி டெலிஷியஸ்... டார்லிங்....'''

எல்லாரும் வாய்விட்டு உரக்கச் சிரித்தார்கள். இந்த 'ஜோக்'கை விம்மி பத்திரிகைகளிலேயே நான்கைந்து தடவை படித்திருக்கிறாள். மிஸஸ் மல்ஹோத்ரா சொல்வது இது மூன்றாவது தடவை.

விம்மி புன்னகை செய்தாள்.

அந்த ஹாலில் உட்கார்ந்திருந்த மற்றவர்கள் அவளை உற்றுப் பார்த்தார்கள். அப்படி அவர்கள் பார்த்தது விம்மிக்குக் கொஞ்சம் கஷ்டமாக இருந்தது.

''சிங்கப்பூரில் குரங்கு மாமிசம் சாப்பிடுகிறார்கள்... ஒருவருக்கு எந்தக் குரங்கு வேண்டும் என்பதற்காகக் கூண்டில் குற்றுயிரும் குலை உயிருமாக அடைக்கப்பட்ட ஐந்தாறு குரங்குகளைக் கொண்டு வந்து காண்பிப்பார்கள்.'' என்றாள் மிஸஸ் ஜெயின்.

''பலர் உள்ளம், 'குற்றுயிரும் குலையுயிருமாக' இருக்கும்போது பார்க்க வேதனைப்படும். சமைத்த பிறகு சமாதானமடைந்து விடும்'' என்றாள் மிஸஸ் மல்ஹோத்ரா.

''ஏ குட் ஒன்...'' என்று கூறிக்கொண்டே மறுபடியும் பெரிய ஆரவாரம்.

''நம் நாட்டில் குரங்கு மாமிசம் சாப்பிட முடியாது... ஹநுமான்ஜி'' என்று சொன்னாள், அதுவரை பேசாமலிருந்த மிஸஸ் அக்னிஹோத்ரி.

''அப்படிப் பார்க்கப் போனால், நம் நாட்டில் எந்த மாமிசத்தையுமே சாப்பிட முடியாது. எல்லா மிருகங்களையும், பறவைகளையுமே தெய்வங்களாகவோ அல்லது தெய்வாம்சம் பொருந்தியவைகளாகவோ ஆக்கிவிட்டார்கள்'' என்று சொல்லிவிட்டுச் சிரித்தாள் மிஸஸ் கன்வர்.

''அவற்றைச் சாப்பிடுவதனால் நமக்கும் தெய்வத் தன்மை வந்துவிடும் என்ற காரணத்தாலிருக்கலாம்'' என்றாள் மிஸஸ் மெஹ்ரா.

''விம்மிக்குத் தெய்வத் தன்மை வருவதற்கு வாய்ப்பே இல்லை. ஷி ஈஸ் எ வெஜிடேரியன்'' என்றாள் மிஸஸ் பரேட்.

''நான் ஒரு சாதாரணப் பெண்ணாகவே இருக்க விரும்புகிறேன்'' என்றாள் விம்மி.

''ஆனால் நீங்கள் ஒரு தெய்வீகப் புருஷனைத் திருமணம் செய்து கொண்டிருக்கிறீர்கள்; அருண் சாப்பிடாத மாமிசமே கிடையாது. இன்க்ளூடிங் பீஃப்...'' என்றாள் மிஸஸ் ஜெயின்.

''என்னதான் சொல்லுங்கள், எனக்கு பீஃப்சாப்பிட மனசு வரவில்லை... அனில் எத்தனையோ தடவை வற்புறுத்தினார், ஐ ஸெட், 'நோ'....'' என்றாள் மிஸ்ஸஸ் பரேட்.

''நீங்கள் ஒருவர்தானா? இங்கு யாருமே பீஃப் சாப்பிடுவதில்லை. நான் சொல்வது சரிதானே?'' என்றாள் மிஸஸ் தல்வார்.

சிறிது நேரம் அங்கு அமைதி நிலவியது. மிஸஸ் தல்வாரின் கூற்றை ஏற்றோ, அல்லது மறுத்தோ ஒருவரும் பேசவில்லை.

பேச்சு ஐந்தாறு நாட்கள் முன்பு நடந்த அழகுப் போட்டியைப் பற்றித் திரும்பியது.

''மிஸஸ் மல்ஹோத்ரா இன்று போட்டியில் கலந்து கொண்டால் கூட



இப்பொழுது வெளிவரும் கல்கியை, பழையதுடன் ஒப்பிட்டுப் பார்த்தால்-அடேயப்பா! என்ன உயர்வு! என்ன உயர்வு! விலையைத்தான் சொல்லுகிறேன். ஆமாம், சரக்கு எப்படி? ஒரே மசாலா: துணுக்கு முதல் சினிமா வரை. மாணவர்களை எதற்கெடுத்தாலும் சமுதாயத்தில் சம்பந்தப்படுத்தப் பார்க்கிறார்கள். அரசியலில் ஆயிற்று, சினிமாக்களில் ஆயிற்று, இப்பொழுது அவர்களுக்காகக் கல்லூரி பேரில் சிறப்பிதழ்! எதற்கெடுத்தாலும் மாணவர்களை இழுத்துக் கொள்ளும் சமுதாயம், வேலைக்கு இழுத்துக் கொள்வதற்கு மட்டும் தயங்குவது ஏனோ!

வி. எஸ். தங்கமணி, சென்னை-18

007 பாணு அதிகமாகத் தமிழ்ப்படங்களைப் பார்த்திருப்பான் போலும். பேச்சு, செய்கை எல்லாம் மிகை, மிகை.

நாங்கள் இத்தனை நாளாய் ஸ்ரீவித்யாவை ஸ்லிம்மாகப் பார்த்தது கிடையாது. வித்யா அந்த 'மெலிந்த' நாட்களை எண்ணிப் பார்த்தாவது கொஞ்சம் எடையைக் குறைக்கட்டும்!

ஒரே ஒரு குறை: கல்கியின் தலையங்கங்கள். நாட்டில் தூங்குபவர்களையெல்லாம் தொந்தரவு செய்யக்கூடாது என்று உங்களுக்குத் தெரிய வேண்டாமா? என்ன பாடுபட்டு அரசியல்வாதிகள் எங்கள் தொடையில் கயிறு திரிக்கிறார்கள். எதனால் இப்படி எழுதுகிறீர்கள்? எங்களைக் கொஞ்சம் தூங்க விடுங்களேன்!

- எஸ். ஹாஜா நஜீமுதீன், எர்ணாகுளம்



# இரண்டே வருடங்களில் விற்பனையில் முதல் இடம்

# JOHNSON®

## மிக்ஸர் கிரைண்டர்

25 வருடத்திற்கு மேற்பட்ட அனுபவமும், இந்தியாவிலே சமையலறைச் சாதனங்களில் ஏராளமான வகைகளும் கொண்ட ஜான்சனின் சீரிய படைப்பு ஜான்சன் மிக்ஸர்— கிரைண்டர். எங்கெங்கும் அறிமுகப் படுத்தினாலும் ஐயமின்றி தலை சிறந்ததென இரண்டே வருடங்களில் பீடு நடை போடுகிறது.

ஏன் எனக் கேட்பின் :

இலவசம் ! தனி எவர்சில்வர் கிண்ணம்!
உலர்ந்த அரவைக்கென தனியான எவர்சில்வர் கிண்ணமிருப்பதால் மசாலாக்களின் மணமும், ருசியும் மில்க் ஷேக்குகளில கலக்காமல் பாதுகாப்பு அளிக்கிறது.





அதிக சுகாதாரம் பாகங்களை எளிதாக கழட்டும்படி தயாரிக்கப் பட்டிருப்பதால் நீங்கள் துப்புரவாகக் கழுவ முடிகிறது. உணவுப் பண்டங்களின் துகள்கள் உள்ளே நின்று விடும் சந்தர்ப்பம் இல்லை.

முழுமையான பாதுகாப்பு. பிளேட் பாகங்கள் இரு கிண்ணங்களிலும் உறுதியாக இணைக்கப் பட்டிருப்பதால் இயக்கத் தில் பிளேட் பறந்து விடாமல் பாதுகாப்பு அளிக்கிறது.





கன ரக ஓட்டம் அதிக உறுதியான 450 வாட் மோட்டார் நமது இந்திய சமையலுக்கென்றே சிறப்பாக அமைக்கப் பட்டிருக்கிறது. 45 நிமிடங்கள் நிறுத்தாமல், தடையின்றி ஓட்டலாம்.

மற்ற சிறப்பு அம்சங்கள்:

- மோட்டார் குளிர்ச்சியாக இருப்பதற்கென தனியான காற்றோட்டம்
- சீரிய கலவை மற்றும் அரவைக்கென மேம்படுத்தப்பட்ட பிளெட் அமைப்பு
- ஒரு வேகத்திலிருந்து மற்றொரு வேகத்திற்கு செம்மையாக மாற்ற இஞ்சர் ஸ்விட்ச்
- ஒரு வருடத்திற்கு உத்திரவாதம் ஜான்சன்

**JOHNSON®**

## இயக்கத்திலும், ஆற்றலிலும் இணையிலாச் சிறப்பு கொண்டது

ASP-BE-8001A

ஜெயித்து விடுவார்'' என்றாள் மிஸஸ் தல்வார்.

''டோன்ட்பி ஸில்லி'' என்று முகத்தில் பெருமை பொங்க இதை நிராகரித்தாள் மிஸஸ் மல்ஹோத்ரா.

''மிஸஸ் தல்வார் சொல்வது வாஸ்தவம் தான். ஒரு மாதம் பட்டினி கிடந்து எலும் பும் தோலுமாகக் காட்சி யளித்தால்தான் அதை அழகு என்கிறார்கள்.. இக் காலத்தில்'' என்றாள் மிஸஸ் மேஹரா.

மிஸஸ் மேஹராவின் கோபம் நியாய மானது என்பது அவள் உடம்பைப் பார்த் தால் தெரிகிறது என்று தோன்றிற்று விம் மிக்கு. சொல்லப் போனால் இங்கு இருக்கிற எல்லோருக்குமே இதைப் பற்றிய கோபம் நியாயமானதுதான்.

''என்னைக் கேட்டால், விம்மி இந்த அழகுப் போட்டியில் கலந்து கொண்டிருக் கலாம். சுலபமாக அவளுக்கு 'வாக் ஓவர்' கிடைத்திருக்கும்'' என்றாள் மிஸஸ் மல்ஹோத்ரா.

''அருண் சம்மதிக்க மாட்டார்... விம்மி அவருடைய பிரத்யேக உடைமை'' என்றாள் மிஸஸ் பரூட், சிரித்துக் கொண்டே.

விம்மி தன் எரிச்சலைச் சமாளித்துக் கொண்டு புன்னகை செய்தாள்.

''ராதிகாவைப் பற்றி நீங்கள் என்ன நினைக் கிறீர்கள்?'' என்று திடீரென்று கேட்டாள் மிஸஸ் ஜெயின், மிஸஸ் மல்ஹோத்ராவிடம்.

''அவள் அறிவைப் பற்றி நினைக்கும் போது, அவள் அழகு நினைவுக்கு வருவதில்லை என்பார் என் கணவர்... ஆபீஸில் அரு ணுக்கு அடுத்தபடியாக அவள்தான் கெட் டிக்காரி என்கிறார்கள்.''

''அறிவு என்று சொல்ல முடியாது... திறமை என்று சொல்லலாம். ஆட்களை எப்படிச் சமாளிப்பது என்று அவளுக்குத் தெரியும் என்று என் கணவர் சொல்லு வார்'' என்றாள் மிஸஸ் மேஹரா.

''யு மீன்....'' என்று சொல்லிவிட்டு விஷமமாகச் சிரித்தாள் மிஸஸ் தல்வார்.

''டோன்ட் பி நாஸ்டி.'' என்றாள் மிஸஸ் மல்ஹோத்ரா புன்னகையுடன்..

சிற்றுண்டிகள் வந்தன.

''நோ சிகரெட்ஸ்?'' என்று விம்மியைக் கேட்டாள் மிஸஸ் மேஹரா.

''நோ'' என்று சொல்லிக் கொண்டே காப்பியைக் கலந்து கொண்டாள் விம்மி.

இவர்களுக்கு ராதிகாவைக் கண்டால் என்ன பொறாமை என்று தோன்றிற்று விம் மிக்கு.

விருந்துகளில் ராதிகா இவர்களுடன் அதி கம் பேசுவதில்லை. ஆண்களுடன் சரிநிகர் சமானமாக அவர்கள் விவாதிக்கும் எல்லா விஷயங்களிலும் அவளால் பங்கு கொள்ள முடியும். அவளுடைய வெளிப்படையான போக்கும், போலித்தனங்களிலும், பாவனை களிலும் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு வேஷங்களை வழிபடும் தன்மை அவளுக் கில்லை என்பதும், இவர்களுக்கு அவள்பால் ஒரு பொறாமை உணர்ச்சியைத் தூண்டி யிருக்கிறது.

அப்பொழுது 'சென்டரின்' சுறுசுறுப் பான காரியதரிசி ராமச்சந்திரன் தனி யாக உட்கார்ந்து காப்பி குடித்துக்கொண் டிருப்பதை விம்மி பார்த்தாள். அவனும் அவளைப் பார்த்துவிட்டுப் புன்னகை செய் தான்.

இந்த இடத்தை விட்டு எழுந்து போனால் தேவலை என்று விம்மிக்குத் தோன்றிற்று.

''ஜஸ்ட் எ மினிட்'' என்று சொல்லிக் கொண்டே அவள் ராமச்சந்திரன் உட்கார்ந் திருந்த இடத்தை நோக்கிச் சென்றாள்.

ராமச்சந்திரன் எழுந்து அவளை வர வேற்றான். ''ஹொவ் ஆர் யு, மிஸஸ் அருண்''

''ஃபைன்...'' என்று சொல்லிக்கொண்டே அவனெதிரே உட்கார்ந்தாள் விம்மி.

ராமச்சந்திரனும் உட்கார்ந்தான். ஹாலின் ஓரமாகத் தனியாக உட்கார்ந்திருந்த ஒரு வரைப் பார்த்துக் கையை ஆட்டினான்.

விம்மி அவன் கையை ஆட்டிய திசையை நோக்கினாள். அவனைப் பல தடவை பார்த் திருக்கிறாள். தனியாகத்தான் வருவான். எப்பொழுதும் அதுதான் அவன் இடம். இந்த இடம் காலியாக இல்லாவிட்டால் போய்விடுவான்.

அவனை யாராலும் கவனிக்காமல் இருக்க முடியாது. இரண்டடி உயரம்; கோணல் மாணலான விசித்திர உருவம். முதுகில் ஒரு பெரிய கூன். அதி தீட்சண்யமான கண்கள்.

''யார் இவன்?... அடிக்கடி இவனை இங்கே பார்க்கிறேன்...'' என்றாள் விம்மி.

''தெரியாதா உங்களுக்கு?... நம்மூர்க்-காரர்தான். தாமோதரன்... ஃப்ரீலான்ஸ் ஆர்டிஸ்ட்... இவரோட அப்பா அம்மா எல்லோரும் டில்லியிலேதான் இருந்தார்கள்; அஞ்சாறு வருஷத்துக்கு முன்னாலேதான் பெங்களூர் போய் 'செட்டில்' ஆயிட் டாங்கன்னு நினைக்கிறேன். அப்பா ஐ.ஸி.எஸ். இவர் இங்கேயே இருக்கார். தனியா.... மை காட், எவ்வளவு படிச்சவர் தெரியுமா? இவருக்குத் தெரியாத விஷயமே ஒண்ணும் கிடையாது. எ ரியலி ஃபேமஸ் பர்ஸன்''..

''பார்க்கலாமா அவரை?''

''ஓ எஸ்... வாங்களேன், 'இன்ட்ர டியூஸ்' பண்ணி வைக்கிறேன்...''

இருவரும் எழுந்து தாமோதரன் உட்கார்ந் திருந்த இடம் நோக்கிச் சென்றார்கள்.




'கல்கி'மாமி 18 முழப் புடவை யுடன் நெற்றிக் குங்குமத்துடன் பாந்தமாய் வரட்டும். பாண்ட் ஷர்ட், நவீனமாய் சொக்கு பண்ணுராயாய் வர வேண்டாம்!

எஸ். ரவிச்சந்திரன், கடலூர்

'கல்கி' சமீப காலமாக எதையோ பார்த்துச் சூடு போட்டுக் கொள்வது போல சினிமா விஷயங்களை லேசாக நுழைப்பது சரியாகப் படவில்லை. வெறும் சினிமா விமர்சனம் மட்டுமே போதும் — நடிகர் நடிகைகள் பற்றிய செய்திகள் வேண்டவே வேண்டாம். அவர்களுடைய personal matter பற்றி விளம்பரமும் வேண்டுமா? இது கல்கிக்குத் திருஷ்டிப் பரிகாரமாக உள்ளது.

கி. பிரான்ஸ், கோயமுத்தூர்

திருஷ்டிப் பரிகாரம்!

---

"மிஸஸ் அருண்... மிஸ்டர் தாமோதரன்" என்று அறிமுகப்படுத்திவிட்டு உட்கார்ந்தான் ராமச்சந்திரன்.

தாமோதரன் எழுந்து கைகளைக் கூப்பி விட்டு உட்கார்ந்தான்.

"உங்களைப் பற்றி இவர் சொன்னார். பார்க்கணும்னு தோணித்து" என்றாள் விம்மி.

"எல்லாருக்கும் என்னைப் பார்க்கணும்னு தோணறத்திலே ஆச்சரியமில்லே..." என்றான் தாமோதரன் சிரித்துக் கொண்டே.

"நோ, நோ... ஐ மீன்...."

"எஸ், எஸ்... ஐ நோ யு டோன்ட் மீன் எனிதிங்... கஷ்டப்படாதீங்க... காப்பி குடிக்கிறீங்களா?"

"வேணும்...இப்பத்தான் குடிச்சேன்."

"வித் தட் க்ரௌட்...."

"ஆ....மா....ம்..." என்று ஒருவிதக் குற்ற மனப்பான்மையுடன் ஒப்புக்கொண்டாள் விம்மி.

"வொய் அபாலஜைடிக்?" என்றான் தாமோதரன் புன்னகையுடன்.

"நோ... நோ... ஐ மீன்... என் சுபாவம் வேறேங்கிறதுக்காகச் சொன்னேன்."

"உங்களோட சுபாவம் என்ன?"

தாமோதரன் காப்பியைப் பருகினான்.

"மிஸ்டர் அருண் ஒரு பெரிய பிஸினெஸ் எக்ஸிக்யூடிவ்... அவருக்காக நான்...."

"இவங்களோட பழக வேண்டியிருக்கு. அப்படித்தானே!" என்றான் தாமோதரன்.

"ஆமாம்... என் இன்ட்ரெஸ்ட், லிட்ரச்சர், பெயிண்டிங், இந்த மாதிரிதான்... நீங்க பெரிய ஆர்ட்டிஸ்ட்'னு ராமச்சந்திரன் சொன்னார்.... அதனாலேதான் உங்களைப் பார்க்கணும்னு தோணித்து..."

"நீங்க எழுதறதுண்டா?... இல்லாட்டா பெயின்டிங்....?"

"அதெல்லாம் ஒண்ணுமில்லே. என் 'லைஃப், பார்ட்டீஸ், பார்ட்டீஸ், அன்ட் மோர் பார்ட்டீஸ்'னு போயிண்டிருக்கு... நான் எழுதுவேனா இல்லாட்டி எனக்குப் பெயின்டிங் வருமான்னு யோசிக்கிறதுக்குக்கூட நேரமில்லே.... இன்ஃபாக்ட், இதைப் பத்தியெல்லாம் நான் யாருக்கிட்டேயும் பேசினதுகூட இல்லே... உங்களைப் பார்த்ததும் உங்க கிட்டப் பேசணும்னு தோணித்து. இதுக்கு என்ன காரணங்கிறதும் எனக்குப் புரியலே... ஐ ஹோப் யு அன்டர்ஸ்டான்ட்!"

தாமோதரன் சிறிது நேரம் பேசாமல் வேறு எங்கோ பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான். விம்மி இப்படிப் பேசியது ராமச்சந்திரனுக்கு ஆச்சரியமாக இருந்தது. அவன் அவளை உற்று நோக்கினான்.

"உங்களுக்கு நிஜமாகவே ஆற்றல் இருந்து அது இன்னும் 'எக்ஸ்பிரஸ்' ஆகலேன்னா அதுக்குக் காரணம் உங்களோட இப்பொழுதைய வாழ்க்கை, போதுமான அளவுக்கு இன்னும் உங்களுக்கு 'போர்' அடிக்கலேன்னுதான் அர்த்தம்...." என்றான் தாமோதரன்.

"போர் அடிச்சாத்தான் இதெல்லாம் சாத்தியங்கறீங்களா?" என்று கேட்டான் ராமச்சந்திரன்.

"போர் அடிக்கணும். இல்லாட்டா ஏதாவது ஒரு விஷயத்திலே ஈடுபாடு ஏற்பட்டு, அதைச் செய்யணுங்கிற ஒரு வெறி பிடிக்கணும்...."

"எனக்கு எதிலே ஈடுபாடுன்னு எனக்கே தெரியாது.... நான் ஒரு சராசரிங்கிறது மட்டும் எனக்குத் தெரியும்."

"சராசரியா இருந்தா அந்தக் கூட்டத்திலேருந்து தப்பிச்சிண்டு இங்கே வந்திருக்க மாட்டீங்க... 'போர்டம்' ஒரு பெரிய பிரச்னைதான். சித்தார்த்தன் புத்தரா மாறினதுக்கு அவனுக்கு ஏற்பட்ட போர்டந்தான் காரணம். 'போர்ட'த்திலே தப்பிச்சுக்கிறதுக்குப் பல வழிகள் இருக்கு... எழுதலாம், படம் போடலாம், பாடலாம்.. இது உங்களுடைய ஆற்றல் எப்படி வெளிப்படறதுங்கறத்தைப் பொறுத்தது. 'ஆற்றல்'இல்லாதவங்களுக்கு, இல்லாட்டா, தங்களுடைய 'ஆற்றல்' எதிலே இருக்குன்னு கண்டு பிடிக்கத் தெரியாதவங்களுக்கு பைத்தியம் பிடிக்கலாம்... ஒருத்தன் தன் மணிக்கட்டைக் கத்தியாலே வெட்டிண்டு, ரத்தம் வந்தவுடனே, சந்தோஷத்திலே ஒரேயடியாக் குதிச்சானாம். ஒரு நல்ல கவிதை எழுதின மாதிரி சந்தோஷம்...."

"நீங்க பெரிய ஆர்டிஸ்டா ஆனதுக்குக் காரணம் 'போர்டந்'தானா? போர்டம் உங்களுக்கு எதனாலே ஏற்பட்டது?" என்றான் ராமச்சந்திரன்.

"எதனாலேயா?" என்று கேட்டுவிட்டு உரக்கச் சிரித்தான் தாமோதரன். பிறகு நிதானமாக ஒரு சிகரெட்டைப் பற்றவைத்துக்கொண்டான்.

"லுக் அட் மீ... நன்னாயிருக்கிறவங்களைக் கேலிச் சித்திரமா போடலாம். என்னை எப்படிப் போட முடியும்? ஒருவேளை நன்னா இருக்கிற மாதிரி போட்டா அது கேலிச் சித்திரமா இருக்கலாம். உமர்கய்யாம் படித்திருக்கிறீர்களா? 'அந்த நான் குயவன் கை ஆட்டத்தாலே நேர்ந்த பிழை'— அது நான்தான்... நான் பொறந்ததே இப்படி... இப்படிப் பொறந்ததுக்கு ஒண்ணு நான் தற்கொலை பண்ணிண்டிருக்கணும், இல்லாட்டா, 'ரிச்சர்ட் தி தேர்ட்' மாதிரி கொலைக்கு மேலே கொலையா செஞ்சிருக்கணும்... என் வாழ்க்கை போரடிக்க வேற காரணம் எதுக்கு? என் உருவமே போறாதா? வாட் டு யு திங்க், மிஸஸ் அருண்?" என்று கேட்டுவிட்டு அவளைப் பார்த்துப் புன்னகை செய்தான் தாமோதரன்.

விம்மி ஆடாமல் அசையாமல் அவனையே பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். அப்பொழுது அவளுக்கு அவன் உருவம் தெரியவில்லை. குரல்தான் கேட்டது.

(தொடரும்)

# படத்தில் கவர்ச்சி இயல்பாக அமைய வேண்டும்

—ஜெயராஜ்

சரியாக 22 வருடங்களுக்கு முன் பத்திரிகைகளில் படம் வரைய ஆரம்பித்த ஓவியர் ஜெயராஜ் அவர்களை வைணவக் கல்லூரி கணிதப் பேராசிரியர் திரு சீனிவாசனின் மனைவி திருமதி நீலா சீனிவாசன் கல்கி வாசகர் என்ற முறையில் பேட்டி கண்டார்:

**கேள்வி:** உங்கள் சித்திரங்களை ரசிக்கும் என்போன்ற வாசகர்களில் கூட பலர் நீங்கள் கதாநாயகிகளைச் சற்று செக்ஸியாக வரைவதாகக் கருதுகிறார்கள். உங்கள் பதில்?

**பதில்:** கிரிடிஸைஸ் பண்ணுகிறவர்களை அவர்களது அர்த்தமில்லாத உளறல் என்று ஒதுக்கிவிட மாட்டேன். அது அவர்கள் பாயிண்ட் ஆஃப் வியூ. ஆனால் என் படங்களைப் பார்க்கிற வாசகர்களுக்கு ஒரு ஸ்பிரிட் ஆஃப் அண்டர்ஸ்டாண்டிங் தேவை என்று மட்டும் சொல்லுவேன். செக்ஸ் என்பது வாழ்க்கையில் ஒரு முக்கியமான அம்சம். கோபம், துக்கம், சந்தோஷம் போல். செக்ஸ் மட்டும்தான் வாழ்க்கை என்று நான் சொல்லவில்லை. மற்ற விஷயங்களை எப்படிப்புரிந்துகொள்ள முடியுமோ அது போல வாசகர்களுக்கு செக்ஸையும் சரியானகோணத்தில் புரிந்து கொள்ளும் மனப் பக்குவம் வரவேண்டும். செக்ஸ் புனிதமானது. கல்யாணம் என்கிற வாழ்க்கையின் உன்னதமான நிகழ்ச்சியில் சாந்தி முகூர்த்தம் என்று முக்கியமான சடங்கைச் செய்கிறோம். செக்ஸை ஒதுக்காதீர்கள். படங்களில் ஃப்ரீயாகப் போடும்போது நான் வாசகரிடம் அந்த மனப் பக்குவம் காலப் போக்கில் வந்துவிடாதா என்று எதிர்பார்க்கிறேன். என் குழந்தைகளுக்குக் கூட தேவையான அளவில், கேஷுவலாக செக்ஸ் எஜுகேஷனைச் சொல்லிக் கொடுத்து விடுகிறேன். எல்லாக் குடும்பத்தினர்களும் இப்படி நடந்து கொள்ளும் நாள் வெகு தூரத்தில் இல்லை என்று நம்புகிறேன்.

**கேள்வி:** கோபுலு, ஆர். கே. லக்ஷ்மண் சித்திரங்களை நீங்கள் ரசிப்பதுண்டா?

**பதில்:** கோபுலுவுக்குப் பத்திரிகை உலகில் உழைக்க நேரம் இல்லை. இவரது லைன் ஸ்ட்ரோக் ஒரு தனி பாணியில் 'தில்லானா மோகனாம்பா'ளில் பிரகாசிக்கத் தொடங்கியது. நடனத் தோற்றங்களை எப்படி இவர் கவனித்துப்போட்டிருக்கிறார் என்று வியந்திருக்கிறேன். அத்தனை தத்ரூபம். ஆர். கே. லக்ஷ்மணனின் காரிகேச்சர் மிகவும் பிடிக்கும். மறைந்த ஓவியர் ராஜுவை அவருடைய இயற்கையான ஒரு தனிப் பாணிக்காகப் பிடிக்கும்.

**கேள்வி:** உங்களுடைய சித்திரங்களில் எல்லாருமே கவர்ச்சியான உருவத்துடன் வரையப்படுகிறார்கள். ஏன் கவர்ச்சியில்லாத அல்லது புடவைத் தலைப்பை இழுத்துப் போர்த்திய பெண்களைக் கதாசிரியர்கள் தங்கள் கதைகளில் வர்ணிப்பதே இல்லையா?

**பதில் (சிரித்துவிட்டு):** வெகு சாமர்த்தியமான கேள்வி. இதைப் பெரிதும் வரவேற்கிறேன். அப்படி வர்ணித்திருந்தால், அதையும் மனம் கவரும் வகையில் போட்டு அந்த வகை வாசகர்களையும் என்னால் திருப்திப்படுத்த முடியும். ஒன்று நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். கவர்ச்சி இருக்கலாம். ஆனால் அது சம்பந்தா சம்பந்தம் இல்லாமல் திணிக்கப்பட்டு இருக்கக் கூடாது.

**கேள்வி:** உங்கள் படங்களை மிஸஸ் ஜெயராஜ் குற்றம் சொன்ன சந்தர்ப்பம் ஏதேனும் இருக்கிறதா?

**பதில் (மனைவியைப் புன்னகையோடு பார்த்துக்கொண்டே):** ஒருபோதும் இல்லை. Rejina is very very understanding.

✕ சீனிவாசன் தம்பதிக்குத் தமது ஓவியங்களின் தொகுப்பு ஆல்பத்தைக் காண்பிக்கிறார் ஜெயராஜ்





'அருள் வாக்கு' பகுதியில் கூறப்படும் விஷயங்கள் நம் மனத்தையும் கடந்து சிந்திக்க வைப்பவை. என்னைப்போன்று தொழிலகங்களில் பணிபுரிபவர்கள் கோவிலுக்கென்று நேரத்தை ஒதுக்க முடியாதவர்கள். 'கல்கி'யில் வெளிவரும் அருள்வாக்கைப் படித்து முடிக்கப் பத்து நிமிஷங்களை வாரத்துக்கு ஒரு முறை ஒதுக்கினால் அதைப் படித்து முடித்ததும் கிடைக்கும் ஓர் ஆத்மதிருப்தி கோவிலுக்குச் சென்று வந்தாலும் கிடைப்பதில்லை என்பது என் அபிப்ராயம். இங்கு பல விருந்துகளில் பேணியுடன் சர்க்கரை கலந்து சாப்பிடுவது வழக்கம். அதில் சிறிது பால் சேர்த்தால் அதனுடைய ருசி பன்மடங்கு அதிகரித்துவிடும். அது போலத்தான் 'கல்கி'யில் வெளிவரும் அனைத்துப் பகுதிகளும் சுவையானது எனினும், அதனுடைய ருசியை அதிகப் படுத்தும் பால் போன்றது 'அருள் வாக்கு' என்றால் மிகையன்று.

அ. குமார், பெங்களூர்-5

---

கேள்வி: கதையைப் படித்துப் பார்த்து விட்டுப் படம் வரைவீர்களா? அல்லது யாரேனும் கதையைப் படித்துக் குறிப்புத் தந்த பின் அதை வைத்துக் கொண்டு படம் வரைகிறீர்களா?

பதில்: படம் வரையத் தகுந்த situation கதையில் கிடைத்த பிறகும் முழுதும் படித்துவிடத் துடிக்கும் ஆர்வம் உண்டு. யாரையேனும் படிக்கச் சொல்லிக் கேட்டுக்கொண்டே கூடப் படம் போட்டு விடுவேன். 45 நிமிஷம், அதிகம் போனால் ஒரு மணி நேரம் போதும்.

கேள்வி: 'வைரங்கள்' தொடர்கதைக்கும், 'கடலுக்குள் ஜூலி'க்கும் Provoccive ஆக வரையச் சந்தர்ப்பங்கள் இருந்தும் உங்களைக் கட்டுப் படுத்திக் கொண்டு படம் வரைந்த மாதிரி தோன்றுகிறதே?

பதில்: ஆமாம். நானாகவே கட்டுப்படுத்திக் கொண்டேன். ஆனால் ஜெனரல் கமர்ஷியல் ட்ரெண்டில்தான் போட்டிருக்கிறேன். பத்திரிகை ஆசிரியர்கள் என்னைக் கட்டுப்படுத்துவதே யில்லை. முழு சுதந்திரம் கொடுத்திருக்கிறார்கள்.

கேள்வி: ஆரம்ப நாளில் நீங்கள் சிரத்தையுடன் சித்திரம் வரைந்த தொடர்கதை?

பதில்: பி. எஸ். ராமையாவின் 'சந்தைப் பேட்டை' தொடர் கதைக்கு மிகவும் அனுபவித்துப் படங்கள் வரைந்தேன்.

கேள்வி: 'கலைமகளி'ல் கூட இரண்டு மாதம் முன்பு ஒரு தொடர்கதைக்கு நீங்கள் படு செக்ஸியாக ஒரு படம் வரைந்திருந்தீர்கள். 'கலைமகளி'ல் கூடவா....?

பதில்: கதாசிரியர் இன்னும் வெளிப்படையாக எழுதியிருந்தார். நான் படத்தில் அத்தனை மோசமாகப் போட்டுவிடவில்லை என்பதே என் கருத்து. தேவையில்லாத இடத்தில் நான் கவர்ச்சியை வேண்டுமென்றே திணித்தது இல்லை. கவர்ச்சியின்றிப் போட்டதால், ஒரு பத்திரிகாசிரியர், 'ரொம்ப ஸ்ரூத்தா, ஒழுங்காப் போட்டுட்டீங்களே!' என்று குறைப்பட்டுக்கொண்டார். நீங்கள் குறிப்பிட்ட கதையில் அது கிளைமாக்ஸ் வருகிற இடம். அந்த impact படத்தில் வரவேண்டும். எழுத்தைக் குறை சொல்லக் கூடாது. Relevance இருக்கிறபோது கவர்ச்சியான, செக்ஸியான ஸீன் போடுவதில் தவறில்லை.

கேள்வி: உங்கள் அப்புசாமி - சீதாப்பாட்டி காரக்டர்களை இப்படித்தான் வரைவது என்று நீங்கள் எப்போது யாரைப் பார்த்துத் தீர்மானம் செய்து கொண்டீர்கள்?

பதில்: சில வயதான பிராமண முதியோர்களைப் பார்த்து! Not just the look of the person. How they talk, how they move . . . அப்புசாமியைப் போட்ட கையோடு சீதாப் பாட்டியையும் வரைந்தேன். ஒரே முகத்துக்கு ஆண் வடிவமும் பெண் வடிவமும் கொடுத்தேன். அப்புசாமியும், சீதாப் பாட்டியும் ஒரே மாதிரி இருப்பதை நீங்கள் கவனித்திருப்பீர்களே? இத்தனை கவர்ச்சியான பெண்கள் படம் போடும் நான், என் லெட்டர் ஹெட்டில் இந்த வயதான தம்பதிகள் படம்தான்போட்டிருக்கிறேன்.

புகைப்படம் : ராமன் பிரதர்ஸ்

---




''ஜெ''கூட கல்கி என்று வந்தால் படங்களைக் கற்பு நிலை பிறழாது வரைகிறார். 'கவர்ச்சி' இல்லாத படங்கள்! அதற்கு ஒரு பத்திரிகை, செலெக்டுபோர்! பல மத ஆசாரியர்களுடைய மொழிகள், கண்ணதாசனின் தத்துவ அலசல் போன்ற கனமான பக்கங்களும், 'கடுகு பதில்கள்', அறிவைக் கிள்ளி வேடிக்கை பார்க்கும் தலையங்கம், அவ்வப்போது வெளியாகும் புதுக்கவிதைகள், தரமான சிறு கதைகள், கார்ட்டூன்கள், எப்போதாவது அத்தி பூத்தாற்போல் எழுதும் செம்பியனின் Satire கட்டுரைகள்-எதையும் படிக்காமல் மேலே பக்கங்களைத் தள்ள முடியாதபடி விஷயங்கள் இருப்பது ஒரு போர்தானே!

ஜே. வி. ஜெயா, M.Sc., வேலூர். (வ. ஆ.)

# அல்ப விஷயம்

## ராஜேந்திரகுமார்

எழுத்தாளர் ராஜேந்திரகுமாருக்குச் சவால் விட்ட வாசகர்.

த. கண்ணன்,
2, சன்னதி வீதி.
திருவாலங்காடு, 631210.
செங்கற்பட்டு மாவட்டம்.

குறிப்பிட்ட நான்கு பொருட்கள்.
லாண்டரி பில், மூக்குத்தி, ஃப்ரிஜ், பந்து.

குறிப்பிட்ட பெயர்கள்.
குழலி, பபிதா : சுந்தரமூர்த்தி.

"ஆயிரம்தான் சொல்லு பாபி" சுந்தரமூர்த்தி சொன்னான். "குழலி வழி வராது." பபிதா முறைத்தாள்.

"சுத்தமோ சுத்தம் அப்படி யொரு சுத்தம். பெருக்கி முடிச்சு அரைப் பக்கெட் தண்ணியிலே பினாயிலே ஊத்தித் துடைச்சு விட்டாள்னு காலால தரையை மிதிக்கவே மனசு வராது. அவ்வளவு இது."

"எது?" பல்லைக் கடித்துக் கொண்டு கேட்டாள் பபிதா. "அவ்வளவு எது என்கிறேன்?"

"அது வந்து... அது வந்...." அவள் முறைப்பதை உணர்ந்து நெளிந்தான். "என் பாபி. எதுக்கு இப்படி முறைக்கிறே? என்ன தப்பாச் சொல்லிட்டேன்?"

"ஊரிலே இருக்கிற பொண்ணுகதான் உசத்தி. ஆயிரம் செய்தாலும் கட்டினவ அலட்சியம்தான்." விம்மினாள். "அப்பா அப்பவே சொன்னார், பாங்க் அக்கவுண்டண்ட் மாப்பிள்ளை வேண்டாண்டி. எதுக் கெடுத்தாலும் கணக்குச் சரி பார்ப்பார்னு. நான்தான் கேட்கலே. இப்ப வேணும் எனக்கு. நல்லா வேணும்."

சுந்தரமூர்த்திக்குச் சிரிப்பு வந்தது.

"ஓகோ கதை இப்படிப் போகிறதா?" என்று நினைத்துக் கொண்டான். வேண்டுமென்றே அவளைச் சீண்டினான்.

"எங்கம்மாவும்தான் அப்பவே சொன்னா. நான்தான் கேட்கல்லே."

"என்ன சொன்னாங்களாம்?"

"பொண்ணு பார்க்கப் போறச்சேயே, பேசுகிற சாக்கிலே பொண்ணு ரூமுக்குள்ளே போய்ப் பார்த்தேன். பொஸ்தகமெல்லாம் கன்னாப் பின்னான்னு இறைஞ்சு கிடக்குது. மேஜை மேலே சுட்டு விரல் கனத்துக்குத் தூசு படிந்து கிடக்குது. பொண்ணு அவ்வளவாச் சுத்தமில்லேடான்னு நானும்தான் கேட்கல்லே பாபி."

இப்படித்தான் அந்த வம்புவளர்ந்தது. பேச்சு கனிசமாக வளர்ந்த போது—

சட்டென்று உள்ளே வந்த குழலி அதே அவசரத்துடன் போகத் திரும்பினாள்.



''என்ன குழலி? என்ன வந்தே உடனே போறே?'' சுந்தரமூர்த்தி அக்கறையாக விசாரித்தான். ''ஏன் ஓடறே?''

''புருஷன் பொஞ்சாதி சண்டை சுவாரஸ்யமா நடக்குது. நான் எதுக்கு குறுக்கே?''

''அதெல்லாம் பரவாயில்லே. என் கட்டிலைக் கொஞ்சம் தூசு தட்டிட்டுப் போயேன்''

வாயைப் பொத்திக் கொண்டு சிரித்தாள். ''அம்மா கிட்டச் சொல்லு சாமி. கட்டில் விஷயம்னு அவங்கதான் அக்கறையோட செய்வாங்க. போய் அரை மணிலே வரேன். அதுக்குள்ளே உங்க சண்டையை முடிச்சிடுங்க. பாத்திரம் துலக்கணும். துணி தோவைக்கணும். நிறைய வேலே இருக்கு. சீக்கிரமா ஆவட்டும்.''

அவள் போவதையே போலியான சுவாரஸ்யத்துடன் பார்த்தான்.

''சண்டையே உன்னுலேதானேடி சண்டாளி'' ஓரக் கண்ணால் மனைவியின் கோபத்தை ரசித்தான். ''அவ நடையைப் பாரேன். விசுக் விசுக்குன்னு என்னமா நடக்கிறா?''

''ஏது...ஏது... அவ வேலையை மட்டும் ரசிக்கிறதை விட்டு இப்ப அவளேயே ரசிக்க ஆரம்பிச்சிட்டீங்க. இருங்க. கழுதை வரட்டும். காசை எண்ணிக் கையிலே கொடுத்துட்டு 'நடடி வெளியே'ன்னு துரத்திடறேன்.''

''எனக்கு ஒண்ணுமில்லேம்மா. நீ துரத்து அப்புறமா அவதிப்படப் போறது நானு? நீதானே?''

'திக்'கென்று விழித்தாள். அவன் சொன்னதில் உண்மை இல்லாமலில்லே.

நீண்டு படர்ந்த அறையின் விஸ்தீரணங்கள் 'என்னைப் பெருக்குவாயா?' என்று சவால் விட்டன.

அம்பாரமாகக் குவிந்த பாத்திரங்கள் 'எங்களைத் துலக்கிக் கழுவித் துடைத்து வையேன் பார்க்கலாம்?' என்றன.

குவியலான அழுக்குத் துணி மூட்டை அழுத்தலாகச் சிரித்தது.

குழலியை விரட்டும் எண்ணத்தை உடனடியாக மாற்றிக் கொண்டாள்.

''அவள் வேணும்.'' மனசுக்குள் முனகினாள். ''அவள் தேவை எனக்கு இருக்கு.''

(இதோ என் கையில் பார்த்தீர்களா லாண்டரி பில். அல்பமான துண்டுச் சீட்டுதான். ஆனால் இது இல்லாமல் லாண்டரிக்காரன் துணியைத் தரத் தயங்குவார். தவிர, கணக்குப் பார்க்க நமக்குத்தான் தவிப்பாக இருக்கும். அதற்கும் ஒரு மதிப்பு உண்டு.)

''அய்ய'' பின்கட்டிலிருந்து குழலி கத்தினாள். ''அட புளி எடுத்துப் போடும்மா. நான் சீக்கிரம் துலக்கத் தாவலே?''

''ஏண்டி கத்தறே சனியனே! இதோ வரேலே.''

பபீதா வீசி எறிந்த புளி உருண்டையைச் சிக்கெனப் பிடித்தாள்.

வாசலில், ''பாபீ, கதவைச் சாத்திக்க. நான் வெளியே போறேன்'' என்று சுந்தரமூர்த்தி கூவவே ''சரிசரி'' என்று அனுப்ப ன் கிளம்பிய பபீதாவுக்கு அந்தக் குழலியின் சிரிப்பு எரிச்சலூட்டியது. ''ஏண்டி சிரிக்கிறே?''

''அதென்னம்மா அது அய்யரு எப்பப் பார்த்தாலும் ஒன்னை 'பாவி பாவி'ங்கறாரு?''

அதிர்ந்தாள். ''பாவியா? அடி நாசமாப் போனவளே. 'பாபீ'ன்னு செல்லமாக் கூப்பிடறாரு.''

''ஒன் பேருலே இருக்கிறதே மூணே மூணு எழுத்து. அதிலேயும் ஒண்ணைக் குறைக்கணுமா?''

''என்னடி என்ன மறுபடியும் சிரிப்பு?''

''இல்லே, என் பேரும் மூணு எழுத்து தான். என் வீட்டுக்காரரும் ஒரு எழுத்தைக் குறைச்சுக் கூப்பிட்டா எப்படி இருக்கும்னு நினைச்சேன். சிரிப்பு வந்தது. குழலி 'குழா' ஆயிடும்..''



'யக்காவ்' என்ற குரல் கேட்டதும் திரும்பினுள்.

குட்டைச் சுவருக்கு அப்பால் அந்தப் பெண் தெரிந்தாள். கண்ணில் ஏகமாக மை பூசியிருந்தாள். அவள் அப்பிக் கொண்டிருந்த மட்ட ரகப் பவுடரின் நாற்றம் இங்கே வரை வந்தது. தலையைச் சொறிந்து கொண்டு 'ஏ' என்று விழித்தாள். அவளது ஏராளமான மார்புகள் பார்ப்போருக்கு படு அவஸ்தை.

பக்கெட் நீரில் கையை முங்கி முங்கிக் கழுவிக் கொண்ட குழலி எழுந்து போனுள்.

அவள் ஏதோ கேட்க — இவள் முந்தானை முடிச்சிலிருந்து ஒரு ரூபாய் எடுத்துக் கொடுத்தாள்.

''நல்ல வாளை மீனுப் பார்த்து வாங்கினேன்க்கா. மச்சானுக்கு வாளை மீனு கொளம் புன்னு உசிரு.'' என்று அவள் சொல்வதைக் கேட்ட பபிதாவுக்கு அருவருப்பில் மூக்கு விடைத்து அடங்கியது.

''இத பாரு குழலி. அந்த மாதிரி கன்றாவி எல்லாம் இங்கே ஏன் கொண்டு வரச் சொல்றே?''

''கொண்டு வந்தா என்னம்மா? உன் நடு வீட்டுக்கா எடுத்துக்கிட்டு வந்திருக்கா? ரோட்டோட நின்னு காட்டிட்டுப் போவுது. அது பச்சைக் கொளந்தே மாதிரி. அதுக்கு உன் விஷயமெல்லாம் தெரியாது.''

''தெரியாதுன்னு நீ சொல்லணும். காலங்காத்தாலே கண்ட கண்ட கன்றாவி எல்லாம்—''

''இந்தாம்மா அது உனக்குப் பிடிக்கல்லேன்னு அதுக்காக அப்படி அசிங்கமாப் பேசிக்காதே. நாங்க ஆசையாச் சாப்புடற பொருளு அது. நான் மட்டும் வேணும். நான் தின்கிற அது மட்டும் ஆவாதாக்கும். காலேயிலே கூட நேத்து வறுத்த கருவாடு துண்டை முறிச்சுத் தின்னுட்டுத்தான் வந்தேன்.''

''சனியனே! அதே கையாலே பத்து பாத்திரம் துலக்கிறே? போடி வெளியே.''

''ஆமாம் போ. நான் போயிட்டா எல்லா வேலேயும் உன் தலையிலேதான் விழும். புள்ளே வேறே உண்டாகியிருக்கே. உடம்பை அலட்டிக்கக் கூடாது. நான் புடிக்கல்லியா சொல்லிடு. வேற ஆளைப் பார்த்து வைச்சுக்கிட்டப்புறமாச் சொல்லு. போயிடறேன். அதுவரைக்கும் நான் இங்கேதான் இருப்பேன். வாங்குற காசுக்கு வஞ்சனை இல்லாம உழைக்கோணும். அதோட மனுஷாளையும் பாசமா மதிக்கோணும். அதான் மனுஷத்தனம். புரியுதா?''

''உன்னைத் திட்டவும் முடியல்லே துரத்தவும் முடியல்லே. ஆகட்டும் சீக்கிரம்'' என்றுள் பபிதா.

(இதைப் பார்த்தீங்களா? இதுதான் மூக்குத்தி. குத்தும்போது சுரீரென்று வலிக்கும். ஆனாலும் நல்ல வைர மூக்குத்தி என்றால் யாரும் மூக்கை நீட்ட மறுக்க மாட்டார்கள்.)

''எனக்குத் தெரியும்.'' தியேட்டர் வாசலுக்கு அவனை இழுத்து வந்து நின்று முறைத்தாள் பபிதா. ''நல்லாவே தெரியும். நீங்க எனக்குத் துரோகம் பண்றீங்க.''

சுந்தரமூர்த்தி சங்கடமாகத் திரும்பிச் சுற்று முற்றும் பார்த்தான். டிக்கெட் கிடைத்த கும்பலும் — திருட்டு 'தம்' அடிக்க ஒதுங்கிய பையன்கள் கும்பலும்—

இவளையும் இவனையும் வேடிக்கை பார்த்தது.

''பபி ப்ளீஸ்.'' சொன்னால் கேளேன்.''

''மாட்டேன். நம்ப மாட்டேன். என்னை டிக்கட் வாங்கி வர அனுப்பிட்டு அந்தப் பொண்ணோட தனியா நின்னு பேசறீங்க. சிரிக்கிறீங்க. நீ போய்ப் படம் பார். நான் அப்புறம் வரேன்கிறீங்க.''

''அவளை யாருன்னு நினைச்சே?''

''தெரியுமே. என் சக்களத்தி.''

''வாயை மூடு. அவ எங்காபீஸிலே எனக்கு மேலதிகாரி. நாளைக்கு எடுக்க வேண்டிய ஒரு முக்கிய முடிவுக்கான விஷயத்தைப் பற்றிக் கொஞ்சம் பேச வேண்டியிருக்குது. மத்தபடி நீ நினைக்கிற மாதிரி இல்லே.''

''பொய். நான் நம்ப மாட்டேன். ஆபீஸ் விஷயம் பேச சினிமாத் தியேட்டர்தானு கிடைச்சுது? சொல்லுங்க. எங்கே வந்து நிக்கச் சொன்னு? போயிட்டு வரேன்னீங்களே. எத்தனை மணிக்குத் திரும்புவீங்க? விடிஞ்சதுக்கப்புறமா?''

சிரித்தான்.

''என்ன சிரிப்பு? கேக்கறதுக்குப் பதில் சொல்லுங்க.''

''இரண்டு பேரிலே யாராவது ஒருத்தர் வாயை மூடினுத்தான். சண்டை நிக்கும். ரெண்டு பேரும் கத்தினு எப்படி ஒரு முடிவுக்கு வர முடியும்? அதோ பாரு. அவங்க காருக்கு வந்துட்டாங்க. நான் வரட்டுமா?''

''எட்டு மணிக்குள்ளே வீட்டுக்கு வந்துடுங்க.''

''எட்டு மணிக்கா? அதுவும் வீட்டுக்கா? ஏன் படம் பார்க்கல்லே?''

''எட்டரை மணி பஸ்ஸிலே நான் ஊருக்குப் போறேன். அம்மா வீட்டுக்கு. திரும்ப மாட்டேன்.''

''டோண்ட் பி ஸில்லி. போய் நல்ல பிள்ளையா படம் பார். நான் வந்து அப்புறமாச் சமாதானப்படுத்தறேன்.''

காரின் குழலொலி கேட்டதும் இவள் கன்னத்தைத் தட்டிவிட்டுப் போனுன்.

---




'கல்கி'யில் என்னை முதலில் கவர்கின்றவை கார்ட்டூன் பக்கமும், தலையங்கமும் தான். உங்களது வெகு தீவிரமான சர்ச்சைக்குரிய வாதங்கள், சில சமயங்களில் இந்திரா ஆதரவாளனுன என்னை எரிச்சலடையச் செய்தாலும், அவற்றில் உள்ள நியாயங்களை மறுகணம் உணர்ந்து சமாதானமாகிவிடுவேன்.

எஸ். விஜயன், இராஜபாளையம்.

(இதைப் பார்த்தீர்களா? ப்ரிட்ஜ். ரெஃப் ரிட்ஜ்ரேட்டர். எப்போதும் எதையும் ஏற்கும். குளுமையாகவே வைத்திருக்கும், எதையும் கெட்டுப் போக விடாது.)

கொதித்துப் போய்ப் பார்த்த பபீதா ஆத்திரத்துடன் டிக்கெட்டுக்களைக் கிழித்துப் போட முயலும்போது — ''அம்மா.... கிழிக்காதிங்க....'' என்று குரல் வரவே நிமிர்ந்தாள்.

அந்த ஆள் சிரித்தான். மல்லு ஜிப்பாவும் கிருதாவுமாக மீசைக்குள் இளித்தான்.

''நான்தான்யம்மா.... உங்க குழலியோட ஊட்டுக்கார் முருகேசு.''

''ஓ!''

''படம் பார்க்கப் போவலியாத்தா? எங்களுக்கு டிக்கட் கிடைக்கல்லே. நீ குடுத்தா... நாங்க பார்க்கிறோம். இதுக்கு ரஜினி படம்னு உசிரு.''

'நாங்க....!' பன்மையில் யாரைச் சொல்கிறான்?

அவன் முதுக்குக்குப் பின்னால் ஒட்டி நின்று நெளியும் அவள் — குழலியின் தங்கை— (வாளை மீன்)... அவனுடைய நெருக்கமும். அவளுடைய வெட்கமும் ஆயிரம் விஷயங்களைப் புரிய வைக்க முயன்றன.

அடப் பாவி! பொண்டாட்டிக்குத் தெரியாமல் மைத்துனியைச் சினிமாவுக்கு கூட்டி வந்து காதல் பண்ணுகிறான்! — அக்கிரமம்!

டிக்கெட்டுகளை வெறுப்புடன் அவன் கையில் கொடுத்துவிட்டு — அவன் நன்றியை அலட்சியப்படுத்தி விட்டு நடந்து போனாள்.

சொல்ல வேண்டும். உடனே குழலிக்குச் சொல்லி அவ தங்கையை ரயிலேத்தி விடச் சொல்லணும். சே! எல்லா ஆண் பிள்ளைகளும் ஒரே மாதிரிதான். துரோகம். ரொம்ப லேசாக வருகிறது அவங்களுக்கு. நடந்தாள்.

''இன்னும்மா சொல்றே? என் தங்காச்சியை உடனே ரயிலேத்தி உடணுமா எனக்கு ஏது தங்காச்சி?''

''என்னடி சொல்றே? யக்கா... யக்கான்னு உன்னைத் தேடிக்கிட்டு வருமே ஒரு பொண்ணு—அதான் வாளை மீனு....''

''அதா? ஐய... அது என் தங்காச்சி இல்லேம்மா. என் ஊட்டுக்காரருக்கும் அதுக்கும் தொடுப்பு இருக்குது.''

''தொடுப்பா? அப்படின்னா?''

''வச்சிகினு கிறார்மா அதை.''

அதிர்ந்தாள். ''என்னடி சொல்றே?''

''இதுக்கும் மேலே எப்படிச் சொல்றது? என் ஊட்டாருக்கு அது ஆசைநாயகி. இப்பவாவது புரியுதா?''

''அது அப்பவே புரிஞ்சு போச்சு. என்னடி அநியாயம் இது? மயக்கிட்டாளா?''

''அதை ஏன் திட்டறே? அது எங்கே மயக்கிச்சு? என் புருசன்தான் மயக்கினாரு.''

''இருந்தாலும் நீ எப்படிடி அனுமதிச்சே? உன் காசை வேறே குடுத்து உதவறே!''

''பின்னே? உன்னாட்டமா பொழுதா பொழுதுக்கும் புருசன் கூடச் சண்டை போடவா சொல்றே? அப்பாடி ஆம்பிளேங்கன்னு கொஞ்சம் அப்படி இப்படி இருக்கத்தான் செய்வாங்க. இதெல்லாம் கண்டுக்கக்கூடாது. தவிர நம்ம ஆம்பிளை இன்னொரு பொம்பளையை மயக்கற அளவு அயகா கிறார்னு நமக்குத்தானேம்மா பெருமை?''

''நல்லா இருக்குடி உன் விவாதம்''

''பின்னே என்னம்மா பண்ணச்சொல்றே? அழுது அடம்பிடிச்சு அமுத்தி வச்சா ஒரு நா அவளை இழுத்துக்கிட்டுப் பூடுவாரு. கண்டுக்காம இருந்தா?—போனா போன அதே வேகத்தோட திரும்பிடுவாரு!''

(இதைப் பார்த்தீங்களா? இது பந்து. குதிப்பதும் பாய்வதும் இதன் தன்மை. சுவரில் அடித்தால் அதே வேகத்தில் நம்மிடம் திரும்பி வரும்)

குழலியோடு ஒப்பிடுகையில் தான் எவ்வளவு பாக்கியசாலி என்று புரிந்தது பபீதாவுக்கு. கணவனைக் காரணமின்றிச் சந்தேகித்துக் குற்றம் சாட்டித் துன்புறுத்துவது எவ்வளவு தவறு என்று உணர்ந்தாள். இரவு வீடு திரும்பிய சுந்தரமூர்த்திக்கு ஒரே வியப்பு! பத்ரகாளியை எதிர்பார்த்து வந்தவனுக்கு சாந்த லட்சுமியாக நின்று சிரிப்புடன் தெரிந்தாள் பபீதா.

''ஒரு நாள் உங்க பெண் அதிகாரி அம்மாளை நம்ம வீட்டுக்குச் சாப்பிடக் கூப்பிடுங்களேன்'' என்கிற மனைவியை நம்பாமல் பார்த்தான்.

# ஆஷா எப்படி ஃபிரிட்ஜ் வாங்கினாள்!











மாதந்தோறும் ரூ. 100/- வீதம் 48 மாதங்களுக்கு டெபாசிட் செய்து வந்தால் உங்களுக்குக் கிடைக்கும் தொகையோ ரூ. 5,727.00. 12 லிருந்து 120 மாத கால வரைகளுக்கு ஆண்டு ஒன்றுக்கு 6 லிருந்து 10 சதவிகிதம் வரை வட்டியை ஈட்டுங்கள்.

**ரெக்கரிங் டெபாசிட் திட்டம்**





**சென்ட்ரல் பாங்க் ஆப் இந்தியா**

(ஒரு இந்திய சர்க்கார் நிறுவனம்)

மக்கள் இருப்பிடம் நாடிப் பணிபுரியும் பாங்க்

Interpub/CBI/5/80 TM.

# "மரபுகளை விட மனிதர்கள் முக்கியம்"

— பாலகுமாரன்



மேற்கு மாம்பலத்தில் குடியிருக்கும் திருமதி வசந்தா நரசிம்மன் இளைய தலைமுறையில் முன்னணி எழுத்தாளரான திரு. பாலகுமாரனைச் சந்தித்து உரையாடுகிறார்:—

**கே: நீங்கள் ஏன் எழுதுகிறீர்கள் பாலகுமாரன்? குறிப்பாக ஏதாவது நோக்கம் உண்டா?**

எனக்குத் தெரிந்தது எதுவோ, அதைச் செய்து கொண்டிருக்கிறேன். நான் எதனால் கவரப்பட்டேனே அதையே என் Communication medium ஆக எடுத்துக் கொண்டிருக்கிறேன்.

நான் படித்த நல்ல எழுத்தால் என் சொந்த வாழ்க்கை மாறியது தெளிவாயிற்று. நானும் நாலு பேருக்குத் தெளிவைக் கொடுக்கலாம் என்கிற எண்ணம் எழுத வைத்தது. ஆரம்ப காலத்தில் எழுத்தாளன் என்று நெஞ்சை உயர்த்திக் கொள்ளும் அசட்டு ஆவலில் நானும் சிக்கி யிருந்தேன். நல்ல நட்புகளும், நல்ல புத்தகங்களும் இந்த அபத்தத்திலிருந்து என்னை மீட்டன. தொடர்பு கொள்ளுதலே வாழ்க்கை என்று புரிந்தபோது எழுதுவதிலே அதிக சிரத்தையும், பொறுப்பும், கவனமும் எனக்குக் கூடின. நான் எழுதிக் கொண்டிருக்கிறேன்.

**கே: அனுபவிப்பதை மட்டுமே எழுதுவேன் என்று ஒரு பத்திரிகையில் எழுதியிருக்கிறீர்களே? அத்தனை கதைகளும் அனுபவமா? மோசமான அனுபவங்கள்தான் அதிகம் போலிருக்கிறதே?**

இன்றுவரை அப்படித்தான். எழுத முடியாதுபோன அனுபவங்கள்தான் நிறைய இருக்கின்றன. மோசமான அனுபவம் நல்ல அனுபவம் என்று பிரிக்க முடியவில்லை — எதையும். அனுபவ திகைப்புதான் சரியாய்ப் படுகிறது எனக்கு. புதிதாய் ஒரு விஷயம் புலப்பட்டு 'ஹா' என்று நெடு நேரம் அயர்ந்து போய் உட்காருகிறேனே அதுதான் எனக்குக் கதை. ஒவ்வொரு நாளும் நான் நிறையக் கற்றுக் கொள்ளுகிறேன். கற்றுக் கொண்டதைப் பகிர்ந்து கொள்கிறேன். நல்லது — மோசம்; சரி — தவறு என்று எதையும் உறுதியாய்ச் சொல்ல இன்னும் முடியவில்லை.

முழுக்க முழுக்கக் கற்பனை பண்ணிக் கதை எழுத ரொம்பப் புத்திசாலித்தனம் வேண்டும். நான் புத்திசாலி இல்லை.

**கே: சிறுகதை, குறுநாவல் இதில் எது எழுதுவது சுலபம்?**

சிறுகதை எழுதுவது எளிது. ஒரு குறிப்பிட்ட கால அளவுக்குள் அதை முடித்து விடலாம். ஆனால் குறுநாவல் — நெடுங்கதை எழுதினால் நிறைவு வருகிறது. ஒரு பெரிய 'கான்வஸில்' நிதானமாகச் சொல்ல முடிகிறது.

**கே: மெஷின்களைப் பற்றி நிறைய எழுதியிருக்கிறீர்களே? எப்படி?**

நான் வேலை செய்யும் இடம். அது ஒரு டிராக்டர் கம்பெனி. தொழிற்சாலை என்பது மிகவும் உயிருள்ள விஷயம். அனுபவித்தவர்களுக்கு அது தெரியும். நான் அங்கே பர்சேஸ் டிவிஷனில் வேலை செய்கிறேன். சகலமான விஷயமும் தெரிந்து கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம்—என் வேலையில் உண்டு. மெஷின்கள் அதிசயமானவை.

**கே: உங்களுக்குப் பிடித்த எழுத்தாளர் யார்? சொல்ல முடியுமா?**

இது பயமுறுத்தும் கேள்வி என்று நினைக்கிறீர்களா? இன்றைக்கு எழுதுபவன் தன்னுடைய முன்னோடிகளை சம காலத்து எழுத்தாளர்களைப் புறக்கணித்து விட முடியாது. நான் எல்லாருடைய எழுத்துக்களையும் கவனமாய்ப் படித்திருக்கிறேன். ஜானகிராமனுடைய நடை, அசோகமித்திரனின் கவனம், ஜெயகாந்தனின் மனிதாபிமானம், சுஜாதாவின் வேகம், சிவசங்கரியிடம் வெளியாகும் Motherliness — இவை எல்லாம் என்னைப் பாதித்திருக்கின்றன. நான் இவர்களிடமிருந்து நிறையக் கற்றுக்கொண்டேன். சுஜாதாவின் எழுத்து மட்டுமல்லாது, அவரும் சிநேகமானபோது எழுதுவது பற்றி நேரடியாய் நிறையக் கேள்வி கேட்டுத் தெரிந்து கொண்டேன். என் ஆரம்பத் தவறுகளைத் திருத்திச் சரிசெய்தவர் சுஜாதா.

**கே: எதன் மீது நம்பிக்கை வைத்து எழுதுகிறீர்கள்?**

மிக நல்ல கேள்வி. என் மீது எனக்குள்ள




பிரச்னை எதுவாக இருப்பினும் நடுநிலைமை தவறாமல், போற்ற வேண்டிய இடங்களில் போற்றி, இடித்துரைக்க வேண்டிய இடங்களில் இடித்துரைத்து வரும் கல்கியின் தலையங்கத் தனித்தன்மையைப் பாராட்டாமல் இருக்க முடியாது. இந்திப் பிரச்னையாகட்டும் அல்லது மாருதியின் அரசுடைமை ஆகட்டும் — பயமின்றி, தன் கருத்துக்களைப் பாமரனும் தெளிவாகப் புரிந்து கொள்ளும் வகையில் சற்று ஹாஸ்ய முறையிலும், பிறகு உணர்ச்சிவசப்படும் முறையிலும் தலையங்கத்தைத் தனக்கே உரிய பாணியில் எழுதும் ஒரே வார ஏடு கல்கி.

-பி. எஸ். விசுவநாதன், பெங்களூர்-17.

நம்பிக்கைதான். எனக்குத் தெரியும்; தெரிந்தது என்ற கர்வம்தான் — இதன் வேர். எனக்குப் புரிந்தது உங்களுக்குப் புரியும் என்ற அடுத்த நம்பிக்கையும் என் தன்னம்பிக்கையைத் தொடர்ந்து வருகிறது. சூழ்நிலைகளும் காலமும் உதவி செய்கின்றன.

கே: உங்களுடைய பல கதைகளில் ஆண் — பெண் உறவைப் பற்றி நிறைய எழுதியிருக்கிறீர்கள்; சில சமயம் 'அடல்டரி' கூட. ஏன் இந்த வக்கிரம்?

முதலில் 'வக்கிரம்' என்ற சொல்லை நான் ஆட்சேபிக்கிறேன். ஒன்று சொல்ல விரும்புகிறேன். இந்தத் தேசத்தில் பெண்களை ஆண்கள் மதிப்பதே கிடையாது. உதாரணமாக ஜீன்ஸும் பேண்டும் பெண்களுக்குச் சௌகரியமான உடை. ஆனால் அவைகளை அணிந்து கொண்டு எத்தனை பேர் சுதந்திரமாக நடமாடுகிறார்கள்? கற்பு என்பதையே புடவையோடு சம்பந்தப்படுத்தி விட்டார்கள். எவ்வளவு அபத்தமான விஷயம் இது!

Another point. மரபுகள் முக்கியமே அல்ல. மரபுகளை விட மனிதர்கள் முக்கியம். மனித நேயம் முக்கியம். மரபுகள் காலத்துக்குக் காலம், தேசத்துக்குத் தேசம் மாறுபடுகின்றன. 'அடல்டரி' என்று குறிப்பிட்டீர்களே அதைக் கூட நான் சர்வ ஜாக்கிரதையாக, ஓர் அவசியத்துடன்தான் கையாண்டிருக்கிறேன். 'மெர்க்குரிப் பூக்கள்' நாவலை முழுக்கப் படியுங்கள் புரியும்.

கே: முன்பு கசடதபற — கணையாழி போன்ற சிறு பத்திரிகைகளில் எழுதிவந்தீர்கள், இப்போது பிரபல பத்திரிகைகளில் எழுதுகிறீர்கள், இதற்காக 'காம்ப்ரமைஸ்' செய்தது உண்டா?

இல்லை. எந்தப் பிரபல பத்திரிகையில் வேண்டுமானாலும் என் கதையைப் படித்துப் பாருங்கள். என் போக்கின்படியே எழுதி வருவது தெரியும். ஆனால் பேட்டிக் கட்டுரை எழுதும்போது மட்டும் நான் ஓரளவு கட்டுப்பட்டு மாற்றி எழுதுகிறேன். படைப்பிலக்கியத்தின்போது — பூரண சுதந்திரத்துடன் தான் எழுதுகிறேன்.

கே: முடிவாய் ஒரு கேள்வி, இதுவரை இந்த எழுத்து என்ன கொடுத்தது உங்களுக்கு?

என் வாழ்க்கை அர்த்தமுள்ளது என்ற நினைப்பைக் கொடுத்திருக்கிறது. மட்டில்லாத சினேகிதங்களை வாரித் தந்திருக்கிறது. விசிறியாய் வந்து வணக்கம் சொன்னவர்களில் சிலர் நெஞ்சோடு ஒட்டிக் கொண்ட சிநேகிதர்களாய் மாறினார்கள். எந்தப் பிரதிபலனும் இல்லாமல் அன்பு செய்தார்கள். நெஞ்சில் சந்துஷ்டியும் சிநேக பலத்துடன் புத்தி கூர்மையும் ஏற்படுத்தினார்கள். இந்த வாழ்க்கைப் போராட்டத்தில் தைரியமாய் ஈடுபடுகிறேன். எதிர்காலம் பற்றி நம்பிக்கையுடன் இருக்கிறேன். வாழ்கிறேன். வேறென்ன வேண்டும் ஒரு தனி மனிதனுக்கு?

புகைப்படம்: சுபா நியூஸ் போட்டோ




நீங்க பிராமணர்களுக்காகவே பத்திரிகை நடத்தறதா ஒரு சிலர் முணுமுணுக்கறாங்களே, ஏனுங்க, அப்படீங்களா...?

இந்தக் குறையைத் தவிர்த்துவிட்டால்-

வீட்டிற்குத் தைரியமாக எடுத்துச் சென்று, எந்தப் பக்கத்தையும் கிழிக்காமல், ஒளிக்காமல் எல்லோர் எதிரிலும் தைரியமாக விரித்து வைத்துப் பார்க்க, படிக்கக் கூடிய ஓர் உயர்வான, அறிவுக்கும் பொழுது போக்கிற்கும் விருந்தாகும் ஓர் அருமையான பத்திரிகை கல்கி. இதை யாரேனும் ஆட்சேபித்தால், அவர்கள் சட்டைக் காலரை இழுத்தும் பிடித்துச் சண்டை போடக் கூட நான் தயாராக இருக்கிறேன்!

-எஸ். ஜலாலுதீன், தாராபுரம்

முதியவர்களுக்கான பத்திரிகையாய் இருந்த கல்கி, தற்பொழுது இளைய தலைமுறையினரையும் ஈர்த்து வருகிறது. மாணவ சமுதாயத்தைக் கவர முயலும் கல்கி கவர்ச்சியாலும் சினிமாவாலும் மட்டுமே அது முடியும் என எண்ணுவதாகத் தோன்றுகிறது. சிரிக்கக் கூடிய ஜோக்குகள், நாலுபேரோடு கலந்து பேசவைக்கும் சிறிய துணுக்குகள் இன்னும் இடம் பெற்றால் கதைகளினாலும், ஆசாரக் கட்டுரைகளினாலும் 40 ஐத் தாண்டியவர்களிடையே பெற்றுள்ள இடத்தை, 20 களிடமிருந்தும் பெறலாம்.

எல். ஸ்ரீ. பங்கர், கோயமுத்தூர்







# விஸ்வரூபம்

**டி. என். கிருஷ்ணன்,** வயலின் பேராசிரியர்

கதை என்ற நிலத்தில் அஸ்திவாரங்கள் பலமாகப் பதிந்து விட்டதால் வீட்டைச் சுலபமாக எழுப்பி விட முடிந்தது. சிவாஜி அஸ்திவாரத்தில் முதல் கல்லாகவுமிருக்கிறார். வீடு முடிந்தவுடன் வண்ணப் பூச்சாகவும் மிளிர்கிறார். ஆரம்பக் காட்சியில் தொடங்கிய அவரின் அழகான, ஆழமான நடிப்பு படம் முழுவதும் நிரம்பியிருக்கிறது. கண்ணுக்கினிய காட்சிகளைத் தந்த ஒளிப் பதிவாளர் விஸ்வநாத ராய், பின்னணி இசையை நயத்தோடு கொடுத்திருக்கும் எம். எஸ். விஸ்வநாதன் அளவோடு வசனம் தீட்டியிருக்கும் ஆரூர்தாஸ் — இப்படி வீடு முழுக்க வண்ணத் தோரணங்கள். ஒரு பக்கம் திரும்பினால் சுஜாதாவின் உயரிய நடிப்பு, மறு பக்கம் திரும்பினால் ஸ்ரீதேவியின் அழகுச் சிரிப்பு.

இடைவேளைக்குப் பிறகு படத்தில் ஓர் இளமை வேகம். அதற்கு முன் தொய்வோ என்பது போல் ஒரு ஜாலம்.

நடிப்பில் விஸ்வரூபம்தான்.

# நிழல்கள்

**ராதாகிருஷ்ணன்,**
தலைவர், பல்லவன் போக்குவரத்துக் கழகம் (மெட்ரோ)



பிரபு: சென்னை மாநிலக் கல்லூரி மாணவன், பொழுது போக்கு: கஞ்சா புகைத்தல். மொட்டை மாடியில் தூங்குதல், கனவு காணுதல். கடைசியில் துர்மரணமடைதல். தோற்றத்தில் சத்ருகன் சின்ஹாவை நினைவுபடுத்துகிறார். நடிப்பு இயல்பாக உள்ளது.

கோபி: பட்டதாரி. டியூஷனின் பலன் மகாலட்சுமிக்கு மனமாற்றம். கோபியிடம் ஒரு பிணைப்பு. இதற்குத் தடை கோபியின் வேலையில்லாத் திண்டாட்டம். பாத்திரப்படைப்பில் தன்னிலை இழக்கும் தன்மை. ஆனால் நடிப்பில் நிதானம்.

ஹரி: குறிக்கோள் 'குயில்' என்னும் ஹார்மோனியத்தை அரவணைத்துக் கொண்டு நினைத்த இடத்தில் சாகித்யம் செய்ய முயல்வது. கடைசியில் விரக்தியில் 'குயிலை' கடலலைகளில் மூழ்கடிப்பது. நடிப்பு இயற்கையாக உள்ளது. முன்னேற அறிகுறி.

மகாலட்சுமி: சென்னை மாநிலக் கல்லூரி மாணவி. பிரபு, கோபி இருவரிடையே சிக்கி ஒரு தடுமாற்ற நிலை. விளைவு ஏமாற்றம். கண்ணீர், ரத்தக் கறை படிந்த கரங்கள். சிறைச்சாலையில் சரணாகதி. நடிப்பு அடக்கமாக உள்ளது.

வீணா: வீணை வித்வான் உயிருடன் இருக்கும்வரைதான் வீணா புதிய ராகம். ராகம் முழு உருப் பெற இயலாமைக்குக் காரணம் வித்வானின் அகால மரணம்.

இசை: இனிமையை ''பொன் மாலைப் பொழுதில்'' ரசிக்கலாம்.

ஒளிப் பதிவு: வண்ணக் களஞ்சியம்.

டைரக்ஷன்: வாழ்க்கையின் நிஜம் நிழலாகிறது.









**சௌந்தரா கைலாசம்**

# மூடுபனி

**ப**னி மூட்டம் பார்வைக்குத் திரை போடும். ஆனால் மூடுபனி திறமையை வெளிச்சம் போட்டுக் காட்டியிருக்கிறது.

விபசாரி விடே கதியென்று தந்தை விழுந்து கிடந்ததால் தாயை இழந்து தவித்த பிரதாப் போத்தனின் பிஞ்சு மனத்தில் ஏற்பட்ட பெரும் பாதிப்பு அவனை ஒரு பித்தனாக நடமாட வைத்து விடுகிறது. விபசாரிகளைத் தீர்த்துக்கட்டுவது அவனுக்கு ஒரு விளையாட்டுப்போலாகி, படத்தின் முற்பகுதி முழுவதும் கழுத்து நெரிப்பு (நமக்கு அறுப்பு?) நடைபெறுகிறது. பிற்பகுதியில் மனநோய்க்கு மருந்தாக ஷோபாவை அடைய எண்ணி முயற்சிகள் மேற்கொள்ளும் பிரதாபின் பிரதாபங்களைப் பேசி முடியாது. இது வல்லவா நடிப்பு என்று நம்மை அவர் எத்தனை முறை எத்தனை காட்சிகளில் சொல்ல வைத்து விடுகிறார்!

மன நோயிலிருந்து விடுபட்டுத் திருந்தி வாழ வேண்டும் என்ற ஆசையில் மருந்து கேட்டுக் கெஞ்சும் பிரதாப்பிடம் சரியென்று இந்த ஷோபாதான் சம்மதித்து விடக் கூடாதா? என்றுகூட நினைக்கத் தோன்றுகிறது. மனிதர் உணர்ந்து நடிக்கிறார். மனத்தில் இடத்தைப் பிடிக்கிறார்.

வாய்ப்புக்கள் ஷோபாவுக்குக் குறைவு என்றாலும் நடிப்பிலே இவர் குறை வைக்கவில்லை. வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் என்ற பழமொழி நினைவுக்கு வருகிறது. மூடுபனியில் ஷோபா கடைசித்தரமாக நடித்ததாகச் சொன்னார் அது முழுப் பொய்! அவர் முதல்தரமாக நடித்திருக்கிறார்.

சிற்றின்பத்தை விலைபேசும் உலகத்துக்கு வரவேற்பு வளைவாக ஒரு சிறுவன் நிற்பது மனத்தைச் சித்ரவதைசெய்வதாக இல்லையா?

படம் நிறையப் பாடல்கள் இல்லை. மனம் நிறைய இரண்டொன்று போதுமே. இன்னிசை இளையருக்கு இது நூறாவது படம். இன்னும் பல நூறு படங்களுக்கு அவரை இசையமைக்கும்படி செய்யப் போகிற படம்.

கவிதைக்குத்தான் உயர்வு நவிற்சி தெரியும் என்பதில்லை. காமிராவுக்கும் தெரியும் என்று காட்டியிருக்கிறார்கள். இயற்கைக் காட்சிகளில் உண்மையிலேயே இவ்வளவு எழில் இருக்கிறதா என்ன? காமிரா கவிதை எழுதியிருக்கிறது.

பல்வேறு கோணங்களில் நின்று பார்த்தாலும் மூடுபனி 'பலே பாலு மகேந்திரா' என்று சொல்லிப் பாராட்டும்படி இருக்கிறது.

பெரியவர்களின் நடவடிக்கை பிள்ளைகளின் பிற்கால வாழ்க்கையை எவ்வளவு பாதித்துவிடுகிறது 'என்பதை எண்ண வைக்கும் படம்.

# வறுமையின் நிறம் சிவப்பு

**சந்தானம்,** டி. எஸ்: ஆர்: அண்டு கம்பெனி தலைமை, நிர்வாகி

படத்துக்கும் தலைப்புக்கும் சம்பந்தமேயில்லை. கமல் அண்டு கம்பெனி என்றுபெயர் வைத்திருந்தால் சரியாக இருக்கும்.

கதை — ஆழமில்லை. அதனால் மதிப்பில்லை.

காட்சிகள் — தாய் இறந்துவிட்டார் என்று தெரிந்த பிறகும் சடலத்தை அடுத்த அறையில் வைத்துக் கொண்டே மகன் இங்கே ஆசையோடு அள்ளி அள்ளிச் சாப்பிடுகிறான் என்பது நம்ப முடியாததாக இருக்கிறது. அதுவும் பார்த்த சில விநாடிகளுக்குப் பிறகு இறந்த தாயின் கையிலுள்ள காப்பை யாருக்கும் தெரியாமல் வெட்டி எடுத்துக் கொள்வது அதீதமான கற்பனை.



கூட்டம் நிறைந்த சந்தடி மிகுந்த மார்க்கெட்டில் குழந்தையைத் திருடிக் கொண்டுசெல்வது நடைமுறைக்கு ஒவ்வுமா?

வசனங்கள் — காரசாரமாக உள்ளன. இயேட்டரை விட்டு எழுந்து செல்லாமல் உட்கார வைப்பது வசனங்கள்தாம். ஆயினும் விதவைகள் வாழ்க போன்ற சில வசனங்களைத் தவிர்த்திருக்கலாம்.

நடிப்பு— பாராட்டை நான்கு பேரும் சமமாகப் பகிர்ந்து கொள்கிறார்கள். கமல், பிரதாப், ஸ்ரீதேவி, எஸ். வி. சேகர்.

பிரச்னையை அலசுகிற திரைப்படம் வண்ணத்தில் இருப்பதால் மனத்தை உருக்கவுமில்லை; மகிழ்விக்கவுமில்லை.

ஆறு பாடல்களில் சிப்பியிருக்குது முத்துமிருக்குது பிரபலமாகலாம். எம். எஸ். வி.க்கு இசை வறட்சி ஏற்பட்டு விட்டதோ என்று தோன்றுகிறது.

படத்தை அவசர அவசரமாக முடித்தது போல் தோன்றுகிறது. ஸ்ரீதேவி யாரை முடிவில் மணந்து கொள்வது என்ற குழப்பம் பாத்திரங்களுக்கு மட்டுமல்ல; இயக்குனருக்கும் இருப்பது தெரிகிறது.

தொகுப்பு: **கலன்**

## அத்தியாயம் 17

இரண்டு மாதங்களுக்கு முன் அரபு நாடுகளில் மூன்று ஆண்டு காலம் பணி புரிய டாக்டர்களும் நர்ஸ்களும் தேவை என்றும், பணி புரிய விரும்புவோர் விண்ணப்பங்கள் அனுப்பலாம் என்றும் ஒரு சுற்றறிக்கை வந்திருந்தது. அதைக் கண்ட உடனேயே அம்மணி நல்லசிவத்திடம் ஓடினாள்.

''நானும் பார்த்தேன்'' என்றான் நல்லசிவம்.

''என்னைப் போன்ற நர்சுகளுக்குத் தங்கும் இடமும் உணவும் அளித்து மாதம் ஐயாயிரம் ரூபாய் தருகிறார்கள். இது ஒரு நல்ல சான்ஸ் டாக்டர்!'' என்றாள் அம்மணி.

''எனக்கு மட்டும் இல்லையா அம்மணி? மாதம் பதினெட்டாயிரம். ஏர் கண்டிஷன் வீடு, கார். நான் மூன்று வருடங்கள் இருந்து விட்டுத் திரும்பி வந்தால் குறைந்ததுஇரண்டு லட்சமாவது கையில் சேரும்!''

''டாக்டர், நீங்க என்ன சொல்கிறீர்கள்? போவோமா?''

''போக ஆசைதான் அம்மணி. ஆனால் என்னை வளர்த்த ஐயாவை என்ன பண்ணுவது?''

''நீங்க வெளி நாட்டிலே இரண்டு வருஷம் இருந்தபோதுஎன்ன பண்ணினாரோ அதை மறுபடியும் பண்ணட்டும்.''

''வீட்டில் சமையலுக்கு ஒருத்தி இருக்கிறாள். கூடமாட ஒத்தாசை செய்ய, கடைகண்ணிக்குப் போக ஒரு பையனும் இருக்கிறான்.''

''பின்னே என்ன? போகலாம்.''

''அம்மணி!''

''என்ன டாக்டர்?''

''நீ போறதுன்னு முடிவு எடுத்தா நானும் ரெடி!'' என்றான் நல்லசிவம்.

''நான் உங்க முடிவுக்காகத்தான் காத்திருக்கிறேன், டாக்டர். அதுக்காகத்தான் ஓடோடி வந்தேன்.''

''நம் எதிர்காலம் சுபிட்சமாக இருக்கும் இல்லையா?''

''டாக்டர், பணத்தால் நிம்மதி கிடைக்காதுன்னு சொல்லுங்க. இருக்கலாம். ஆனா நிச்சயமா வசதிகள் பெருகும். பாங்க்லே நம்ம பணம் இருக்கிறது என்கிற நினைப்பே ஒரு தனி உற்சாகத்தையும் பாதுகாப்பையும் தர்றது. இப்ப என் அகௌண்ட்லே என் அம்மா வைத்து விட்டுப் போன பணம் இருக்கு. அது என்னிக்கும் என் அம்மா பணம். ஆனா நான் சம்பாதிக்கச் சேர்த்தது எவ்வளவுன்னு பார்த்தா சொல்லவே வெட்கமாயிருக்கு...''

''ஓகே, அம்மணி. இரண்டு பேரும் அப்ளிகேஷன் போட்டு வைப்போம். கிடைச்சா ரெண்டு பேரும் போகலாம். ஒருவருக்குக் கிடைச்சு இன்னொருவருக்கு இல்லைன்னா, யாரும் போகக் கூடாது! என்ன சொல்றே?''

''ஓ.கே. டாக்டர். நீங்கதான் ஒரு வாய்ப்பை இழப்பீர்கள். உங்களைத் தேர்ந்தெடுக்க, உங்களுக்கு எல்லாத் தகுதிகளும் இருக்கு!'' என்றாள் அம்மணி.

அன்றே இருவரும் தத்தம் விண்ணப்பங்களைச் சேர்க்க வேண்டிய இடங்களில் சேர்த்தார்கள்.

மூன்றாவது வாரம் அரபு நாட்டுப் பிரதிநிதியும் ஒரு ஐரோப்பிய டாக்டரும் இன்னும்



ஓரிரண்டு பேர்களும் நேர்முகப் பேட்டிக்குப் பலரை அழைத்தார்கள். நல்லசிவம் டாக்டர்கள் வரிசையில் செல்ல, அம்மணி மேலும் சில நாட்கள் காத்திருந்து விட்டு நர்சுகளுடன் நின்றாள்.

இது நடந்து நாற்பது நாட்களுக்கு மேல் ஆகிவிட்டது.

அம்மணி அரபு நாடுகளையே மறந்து விட்டாள்.

• • •

அன்று அறைக்கு அவள் திரும்பிய போது, லில்லி கொசுவலை போன்ற ஓர் ஆடையில்காட்சி யளித்தாள். அவளுடைய துடைகளும் மார்பகமும் யாரை மயக்கி இழுக்கஇப்படி ஆர்ப்பாட்டம் செய்கின்றன என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்டு, ஆடைகளைக் கழற்ற அம்மணி முற்பட்டாள்.

''ஏய் அம்மணி, இந்த நெக்ளிஜி எப்படி இருக்கு?'' என்றாள் லில்லி.

''கோரம்!''

''நீ இப்படிச் சொல்றே! கோகுல் என்ன சொல்றான் தெரியுமா?''

''யார் கோகுல்?''

''நேத்து என்னைப் பிக்-அப் பண்ணி சவேராவுக்கு அழைச்சுக்கிட்டுப் போனானே அவன்.''

''என்ன சொல்றான்?''

''நான் நேத்து ராத்திரி சாப்பிட்டு விட்டு அவன் வீட்டுக்குத்தான் போனேன். மனைவியை ஊருக்கு அனுப்பியிருக்கிறான். லெகண்ட் டெலிவரி.... அவன் வீட்டு பெட்ரூமை நீ பார்க்கணுமே..... அப்பா, அங்கப் பிரதட்சணம் செய்யலாம்.''

''வா! வரதன் மைண் ட்டே கான்சர் அதிக



...யிடுத்து லில்லி. யாரையாவது கல்யாணம் செய்து கொண்டு ஏன் ஒழுங்காக் குடித்தனம் பண்ணக் கூடாது... உனக்கு டீலக்ஸ் ஹோட்டல்லே டிபன் சாப்பிடற மாதிரி ஆயிடுத்து. வெட்கம், மானம் இல்லாம நடந்துகொள்றே!''

''ஷட் அப்! நீ இரண்டு பேரைக் காதலிச்சே. நம்பினே... உடலைப் பொறுத்த மட்டில் கற்புக்கரசியா, கன்னிப் பெண்ணு இருந்துட்டே... ஆனா உன் மனசு? சதா காலமும் ராத்திரிக் கட்டிலையே நினைச்சு ஏங்கிண்டு இருந்தது. ஆனா நான் அப்படி இல்லைடீ! ஐ'ம் ஃப்ரீ... எனக்கு எந்த விதமான அட்டாச்மெண்டும் கிடையாது... நான் யாரையும் நம்பி என் ராத்திரியை வீணாக்கலே.... அப்பப்ப யாரோ ஒருவன் வருகிறான். பரிசுகள் தருகிறான். என் உடல் அழுகி வெந்தப்புறம் என் பரிசுத்தமான ஆத்மா இருக்குமடீ!''

'ஸ்டாப் இட்! நான் போறேன்!''

''நல்லசிவம் ஒரு தடவையாவது உன்னை அணைத்து முத்தமிட்டிருந்தால் நீ மற்றவர்களைப் பற்றி இப்படிப் பேச மாட்டே. அம்மணி, நீயும் நானும் எவ்வளவு சண்டை பிடித்துக் கொண்டாலும் உண்மையான சிநேகிதிகள்....''

''வேறே டாப்பிக் பேசுவோம்.''

''ஓகே... உனக்கு ஆர்டர்ஸ் வந்திருக்கு''

''என்ன ஆர்டர்ஸ்?''

''மங்கட் ஜெனரல் ஹாஸ்பிட்டல்லே நர்ஸ்!''

''நிஜமாகவா? எங்கே ஆர்டர்ஸ்?''

''ஆபீஸில்!''

''அப்படியா?''

''கார்த்தாலேதான் வாங்கிக்கொள்ளலாம். இந்த நெக்ஸிஜியைப் பத்தி நான் கேட்ட கேள்விக்கு என்ன பதில்னு நீ இன்னும் கேட்கலே, அம்மணி!''

''லில்லி!''

''என்னடீ!''

''நல்லசிவத்துக்கும் ஆர்டர்ஸ் வந்திருக்கா?''

''அவனுக்கு வந்தால் என்ன? வராமற் போனால் என்ன?''

''சொல்லேன்.''

''எனக்கு எப்படியடி தெரியும்? ஆபீஸ் ப்யூன் இங்கே உன் ஆர்டர்ஸைக் கொண்டு வந்து, நீ இல்லேன்னு உடனே திரும்பிப் போயிட்டான்.''

''நான் போயிடறேண்டி, லில்லி... ஒரு மூணு வருஷம் இந்த அட்மாஸ்பியரிலிருந்து விடுதலை வேண்டும்.''

''டோன்ட் பி ஸ்டுபிட். நாத்தி முப்பது டிகிரி வெய்யிலிலே ஏன் கருகிச் சாகணும்?''

''எல்லாம் ஏர் கண்டிஷன், லில்லி...எல்லா வசதிகளும் தருகிறா!''

''நீ முக்கியமான ஒன்னை மறந்து போயிட்டே அம்மணி!''

''என்னடீ அது?''

''போனா ரெண்டு பேருமாப் போறது, இல்லேன்னா ஒருத்தரும் போவதில்லேன்னு நீயும் நல்லசிவமும் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறீர்கள் இல்லே?''

''அது அப்போ!''

''இப்ப அந்த ஒப்பந்தம் செல்லுபடியாகாதா?''

''எப்படி ஆகும்?''

''நல்லசிவம் உன்மேல் இருக்கிற அபரிமிதமான ஆசையால், மோகத்தால் மதி கெட்டு நடந்து கொண்டான் என்பதற்காக நீ ஒரேயடியாய் அவனை உதாசீனப் படுத்துவதும், அலட்சியப்படுத்துவதும் சரியில்லை அம்மணி! உண்மையான காதல் அற்ப விஷயங்களுக்கு அப்பாற்பட்டது. அவன் இன்னும் உன்னை மனசார நேசிக்கிறான்!''

''சைத்தான் வேதம் ஓதுகிறது. நீ உண்மையான காதலைப் பற்றிப் பேசுகிறே!''

''உயிர்ச் சிநேகிதி என்ற முறையில் நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டேன் இனி உன் இஷ்டம்!'' என்றாள் லில்லி.

மறு நாள் காலை ஒன்பது மணிக்கு அவள் ஆஸ்பத்திரி அலுவலகத்துக்குச் சென்றபோது தலைமைக் குமாஸ்தா இருக்கவில்லை. ஒரு டைப்பிஸ்டும் ஒரு குமாஸ்தாவும் மட்டுமே இருந்தார்கள். அவள் குமாஸ்தாவை அணுகினாள்.

''என் பெயர் அம்மணி!''

''அதுக்கு என்ன?'' என்று கேட்டான் குமாஸ்தா.

''ஹெட் கிளார்க் வரலியா?''

''நாற்காலி காலியாக இருக்கு போல இருக்கே!''

''ஸாரி... நான் வரேன்!''

''ஸிஸ்டர்!''உங்களுக்கு என்ன வேணும்?''

''எடக்காப் பேசறதிலே உங்களுக்குத் தனி ஆனந்தம் போலிருக்கிறது. நான் செக்ரடரியைப் பார்த்துப் பேசிக் கொள்கிறேன்.''

''நீங்க அங்கே பேசினாலும் அவர் இங்கே தான் பியூனை அனுப்புவார்! என்ன வேணும்?''

அவள் வந்த காரியத்தைக் கூறினாள்.

''ஏழெட்டுப் பேருக்கு வந்திருக்கு. நேத்து நாலு பேருக்கு டெஸ்பாட்ச் பண்ணினோம். கொஞ்சம் இருங்க!''

குமாஸ்தா மேஜையைத் திறந்தான். கண்ட கண்ட காகிதங்கள் குப்பையும் கூளமுமாகக் கிடந்தன.

''ஏம்மா டைப்பிஸ்ட் லதா! இந்த அரேபியன் எக்ஸ்கர்ஷன் லிஸ்டைப் பார்த்தாயா? ஆர்டர்ஸ் எதுவும் என் டேபிள்லே இல்லையே?''

---



'கல்கி' மூலம் எழுத்துலகில் புகுந்த பலர் இன்று புகழ் மணம் பரப்பிக்கொண்டிருப்பது யாவரும் அறிந்த உண்மை. வியாபார நோக்கத்துடன் பாலுணர்ச்சியைத் தூண்டும் கவர்ச்சியான படங்களுடன் சிறுகதைகளையும், துணுக்குகளையும் தரும் பத்திரிகைகளுடன் 'கல்கி' கலந்துவிடாமல், தமிழ்ப் பண்பாட்டின்படி தனித்து நின்று அதன் பெருமைக்காகப் பாடுபட்டு வருகிறது. இன்றையப் பத்திரிகை உலகில் உண்மையான குடும்பப் பத்திரிகை என்று கூறவேண்டுமானால் அது கல்கி ஒன்றாகத்தான் இருக்கமுடியும்.

கு. அருணாசலம், தென்காசி

# "ஈகிள் கார்ஸோம் பற்றி சொல்லவும் வேண்டுமா?"





"இது உங்களுக்கு எந்நேரமும் பணி புரியும்..."

காலை, உச்சிவேளை, இரவு

"இது கைவசம் இருக்கவேண்டிய ஒன்று..!"

தூசு உட்செல்லாது மூடுகிறது...24 மணி நேரத்திற்கு சூடு குறையாது காக்கிறது.




CASE-112-182-TM



"என்ன இருந்தாலும் இது ஈகிள் வாக்கூம் ஃப்ளாஸ்க் அல்லவா?"

ஈகிள் வரிசையிலே 123 வேறுவேறு தினுசுகள்.

லதா சிரித்தாள்.

''லிங்கம் உனக்கு வாய்க் கொழுப்பு ரொம்ப அதிகம். அது என்ன அரேபியா எக்ஸ்கர்ஷனு?''

''பின்னே என்ன? பணம் என்கிற சுகத்தை அனுபவிக்கப் போறஅது எக்ஸ்கர்ஷன்தான். எங்கே ஆர்டர்ஸ்?''

''ஹெட் கிளார்க்கிடம் இருக்கும்!''

''என்ன என்கிட்டே இருக்கும்?'' கேட்டுக்கொண்டே ஹெட் கிளார்க் வந்தார்.

''குட் மார்னிங் சார்!'' என்றாள் அம்மணி.

''அட அம்மணியா! குட்மார்னிங்.. மை ஹார்ட்டி கங்க்ராஜுலேஷன்ஸ்!''

''எதுக்கு ஸார், எக்ஸ்கர்ஷன் போக ஆர்டர்ஸ் வந்திருக்கே. அதுக்கா!''

''எஸ்கர்ஷனு?''

''அப்படித்தான் இந்தக் குமாஸ்தா வர்ணிக்கிறா!''

''அவன் ஒரு ஜாலி டைப் அம்மணி... இரு உன் ஆர்டர்ஸை எடுத்துத் தரேன்...''

அவன் திரும்புவதற்கு முன் ''சார் ஒரு விஷயம் கேட்கலாமா?'' என்று கேட்டாள்.

''என்ன?''

''டாக்டர்களுக்கும் ஆர்டர்ஸ் வந்திருக்கிறதா?''

''நாலே நாலு பேருக்கு. ஒரு பல், ஒரு கண், ஒரு ஹார்ட். அப்புறம் ஒரு ஜெனரல்''

''ஜெனரல் யார் சார்?''

''டாக்டர் நல்லசிவம்!''

''தாங்க்யூ சார்.''

அன்று நல்லசிவம் பிற்பகலில்தான் வருவான் என்பதை அறிந்தபோது அம்மணி ஆச்சரியப்பட்டாள். எது தவறினாலும் நல்லசிவம் காலை ஏழு மணிக்கு ஜி. எச்க்கு வருவது தவறாது. இரவு டியூட்டி இருக்கும் நாட்களில் கூட வீட்டுக்குப் போன் சுவட்டிலேயே திரும்பி விடுவான்.

ஏன்? என்ன காரணத்துக்காக நல்லசிவம் வரவில்லை?

கேள்விக்கிடையே ஏன் அவனைப் பற்றி அவள் இன்னமும் நினைக்க வேண்டும்? என்று இன்னொரு கேள்வி எழுந்தது. அவளுக்கு முன்னொரு காலத்தில் மோகன் என்று ஒருவன் காதலனாக இருந்த செய்தியைக் கேட்டதுமே முகம் சுளித்து, மனம் வெறுத்து, வார்த்தைகளால் அடித்து அவளை விரட்டிய டாக்டர் நல்லசிவத்திடமிருந்து தனக்கு ஒரு மாபெரும் விடுதலை கிடைத்துவிட்டதாக எண்ணினாளே? இப்போது ஏன் மீண்டும் நினைவு திரும்புகிறது? ஒருவேளை நல்லசிவம் இன்னமும் அவள் நெஞ்சை விட்டுப் பூரணமாக வெளியேறவில்லையோ? வெளியேற்றிவிட்டோம் என்று அவள் நினைத்துக் கொண்டிருந்தது பிரமையோ? அல்லது மன சமாதானத்துக்குத் தன்னைத் தானே ஏமாற்றிக் கொண்ட விந்தையோ!

உண்மையான காதல்!

அற்ப விஷயங்கள்!

அபரிமித ஆசையால், மோகத்தால் மதிகெட்டு நல்லசிவம் நடந்துகொண்டான்.

ஒரே அடியாய் உதாசீனம் செய்வதும், அலட்சியப்படுத்துவதும் சரி இல்லை.

லில்லியின் வார்த்தைகள் மீண்டும் மீண்டும் அவளுள் ஒலித்தன.

நர்ஸ் உடையில் இருந்த அவள் லீவு எழுதிக் கொடுத்துவிட்டு அறைக்கு வந்தாள். வாயில் சிகரெட்டுடன் லில்லி கதவைத் திறந்தாள். அது வெறும் சிகரெட்டு அல்ல என்று அம்மணிக்குத் தெரியும்.

''ஏண்டி மட்டமா?''

''ஆமாம், ஆர்டர்ஸை வாங்கிண்டேன்!''

''எங்கே கொடு பார்க்கலாம்.''

உறையை அவளிடம் கொடுத்துவிட்டு அம்மணி நர்ஸ் உடையிலிருந்து புடவைக்கு மாறினாள்.

அவள் சிந்தாதிரிப் பேட்டையை அடையும்போது மணி பத்து. ஏற்கனவே ஒரு தடவை அவள் நல்லசிவத்தின் வீட்டுக்குவந்திருந்ததால் எளிதாகக் கண்டு பிடிக்க முடிந்தது.

ஒரு கிழவர் திண்ணையில் உட்கார்ந்திருந்தார். அவர் முகம் சோகத்தில் தொங்கிக் கிடந்தது.

''டாக்டர் இருக்கிறாரா?''

''உள்ளே இருக்கான். நீ யார்?''

''என் பெயர் அம்மணி.''

''ஓ, நீதானா அது?''

''நீங்கதானே அவருடைய ஐயா சபாபதி என்கிறவர்?''

''ஆமாம்.உள்ளே போய்ப் பார்.உன்னாலாவது அவன் மனசை மாத்தமுடியுமா பார்!''

''என்ன ஐயா சொல்றீங்க?''

''இங்கே இருக்கிற பணம் போதலியாம்... அரேபியா போறானாம்!'' என்றார் சபாபதி.

அடுத்த கணம் அம்மணி பாய்ந்து முன்னேறினாள். அறையில் நல்லசிவம் வேகமாக எழுதிக் கொண்டிருந்தான்.

''குட் மார்னிங் நல்லசிவம்!''

நல்லசிவம் ஏறிட்டுப் பார்த்தான்.

''நான் இங்கே வந்திருப்பது ஆச்சரியமா இருக்கா, டாக்டர்?''

''என்ன விஷயம்!''

''கங்கிராஜுலேஷன்ஸ்... உங்க ஐயா உங்க மனசை மாத்தணும்னு சொன்னார். ஆனா நான் அதை இன்னும் கெட்டிப்படுத்த வந்திருக்கிறேன். எனக்கும் ஆர்டர்ஸ் வந்திருக்கிறது. டாக்டர்! நாம் பேசிக்கொண்டபடி இரண்டு பேரும் சேர்ந்து....''

''அது அந்த நாள்.''

''இது இந்த நாள்... கொஞ்சம் நிதானமாக யோசனை செய்து பாருங்கள்.... உண்மையாகவே நான் தவறு செய்திருந்தாலோ, துரோகம் இழைத்திருந்தாலோ அது என்ன தவறு, என்ன துரோகம்னு சொல்லுங்க... சின்ன வயசிலே, முதிராத மனசிலே மோகம் ஒண்ணு என்னைத் தாக்கித்துன்னு அது பருவக் கோளாறு. டாக்டர்... ஆனா நான் என் மனசாலே, என் உடம்பாலே இதுவரையில் எந்தத் தப்பும் செய்ததில்லே.... டாக்டர், என்னை நம்புங்கள்....''

நல்லசிவம் வாயடைத்துப் போனான். ஏழெட்டு நாட்களாக அவனுள் அடைந்து கிடந்த தாபம் பீரிட்டு வந்தது.

அவளையே கண்கொட்டாமல் பார்த்தான்.

(தொடரும்)

---

''மாப்பிள்ளைக்கு எம்மதமும் சம்மதமாம்!''

''பரவாயில்லையே!''

''என்ன பரவாயில்லை! தலை தீபாவளிக்கு செய்த சீர், பொங்கலுக்கு செய்யப் போறசீர், இது இல்லாம கிறிஸ்மஸுக்கும், நியூ இயருக்கும் வேற சீர் செய்யணுமாம்!''

-வெ. சீதாராமன்

# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்




## காம்ப்ளான்®

**ஒன்றில்தான் அவர்களுக்கு அன்றுடம் தேவைப்படும் 23 ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.**

வளரும் குழந்தை-களுக்கென்றே சிறப்பான சில தேவைகள் உள்ளன—வளரும் வயதிலே உடம்புக்குத் தேவைப்படும் மிகச் சிறந்த புரதம், 22 மூலாதார ஊட்டச் சத்துக்கள்—அளிக்கிறது காம்ப்ளான். மறவாதீர்கள், டாக்டர்களின் சிபாரிசு பெற்ற, திட்டமிட்ட உணவு காம்ப்ளான்.

**இலவசம்!** 32 பக்கங்கள் கொண்ட கைப் புத்தகம்.

"குடும்பத்திற்கான பரிபூரண ஊட்டச் சத்துணவு வழிகாட்டி"
50 பைசா தபால்தலை இணைத்து இம் முகவரிக்கு எழுதிப் பெறுக:
தபால் பை நம்பர் 19118, (Comp) G-78, பம்பாய் 400 025.

**திட்டமிட்ட பரிபூரண உணவு — காம்ப்ளான்®**

எழுத்தாளர் எஸ். ப்ரியாவுக்கு சவால் விட்ட வாசகர் :

ராதா விசுவநாதன்
12, டீச்சர்ஸ் காலனி
ராயப்பேட்டை, சென்னை-14

கதையில் வரவேண்டுமென்று வாசகர் குறிப்பிட்டவை :

நீலவானம், புயல், வால் நட்சத்திரங்கள், கண்ணீர்த் துளி., உஷா, கிரிஜா, குமார்,

தாழ்வாரத்தின் வழியாகக் கதவைப் பூட்டி விட்டுச் சாவியைக் கைப் பையினுள் போட்டுக்கொண்டாள் உஷா. குமார் காருடன் கேட்டுக்கு வெளியே அவளுக்காகக் காத்திருந்தான். வராந்தாவில் நின்றிருந்த வேலைக்காரனும் அவனது மனைவியும் பணிவுடன் எழுந்து நின்றார்கள். வராந்தா கதவை மட்டும் பூட்டாமல் அவர்களுக்காகத் திறந்தே வைத்துவிடுகிறாள் அவள்.

அவள் காரில் ஏறிக்கொண்டவுடன் அவன் காரைக் கிளப்பினான்.

''யூ ஃபீல் ஹாப்பி நௌ உஷா?'' அவன் ரொம்பவும் ஆசையாகக் கேட்டான்.

அவள் பதில் சொல்லாமல் அவன் முகத்தைப் பார்த்துப் புன்னகைத்தாள். அவள் சந்தோஷமாகத்தான் இருக்கிறாள் சரி. ஆனால் அவள் மனசின் ஒரு பகுதி வருத்தத்திலும் மூழ்கிப் போகிறது.

''ரெண்டு மாசமா மெட்ராஸ் போகணும்னு பிடிவாதம் பிடிச்சே! நௌ யூ மஸ்ட் பி ஸாடிஸ்ஃபைட்!''

ஆமாம், இல்லை என்றெல்லாம் அவள் எதுவுமே சொல்லவில்லை. சொல்ல முடியவில்லை அவளால். எப்படி ஸாடிஸ்ஃபாக்ஷன் வரும்? குழுமையாக வந்துவிடக் கூடியதா அது? ஒரு வாரத்துக்குப் பிறகு மறுபடியும் பங்களூருக்குத்தான் திரும்பி வந்தாக வேண்டும்? ஆனாலும் மனசில் ஒரு மூலையில் ஆறுதல் பிறக்கிறது. அந்த ஒரு வாரத்தை நினைத்து மனசில் ஒரு சிறு மகிழ்ச்சி எட்டிப் பார்க்கிறது. அதைத் தொடர்ந்து ஒரு சிறு வலியும் ஏற்படுகிறது.

பாவம், குமார். திருமணம் ஆன நாளிலிருந்து அவளுடைய எந்த ஆசையையும் நிறைவேற்றாமல் இருந்ததில்லை அவன். திருமணம் இப்பொழுதுதான் நடந்தது போல இருக்கிறது. ஆனால் ஐந்து வருடங்கள் ஆகிவிட்டன.

அவள் அங்கே போவதற்குக் காரணம் பிரபுவைப் பார்க்கத்தான். நடந்ததெல்லாம் இப்பொழுது நினைத்தால் ரொம்ப சாதாரணமாகத் தெரிகிறது. பிரபுவைக் காதலித்தது... குமாரைக் கல்யாணம் பண்ணிக்கொண்டது எல்லாமே. ஆனால் குமாருடன் வாழ்ந்துதான் ஆகவேண்டும்.

குமாரின் முகத்தை ஒரு தரம் பார்க்கிறாள். அவள் பிரபுவைக் காதலித்தாள் சரி. பட் ஷி லவ்ஸ் குமார் ஆல்ஸோ. அவள் கணவனைக் காதலிக்காமல் அவளால் இருக்க முடியாது. ஆனாலும் மனசில் நினைவுகள் போராடுகின்றன.

கார் பாதி தூரம் போய்விட்டது. மூடிக்கொண்டிருந்த கண்களைத் திறந்தாள் உஷா.

''அங்கேபோய் எங்கே தங்கறது குமார்?''

''எனி ஹோட்டல்?''

''இல்லை! மங்களம் மாமி வீட்டிலே!''

''யாரது மங்களம் மாமி?''

''நாங்க இருந்த வீட்டுக்குப் பக்கத்து வீட்டிலே இருந்தா!''

''சேச்சே! அங்கே எப்படி?''

''குமார்!'' அவள் தீர்மானத்துடன் ஆரம்பித்தாள்.

இதைப் பற்றி நிறையப் பேச முடியும் அவளால். திருமணத்துக்கு முன்னால் தான் இருந்த வீடு ஞாபகத்துக்கு வந்தது. அந்தத்



தெரு... இரண்டு தெருக்கள் தள்ளியிருந்த பிரபுவின் வீடு. எவ்வளவு இனிமையான சூழ்நிலை அது! அதே சூழ்நிலையை மறுபடியும் அனுபவிக்க ஒரு சந்தர்ப்பம் தேவை அவளுக்கு. அண்ட் ஷி வாண்ட்ஸ் இட் பேட்லி. கிடைத்திருக்கிற நேரம் ரொம்பக் குறைவாக இருக்கலாம். ஆனால் அந்த இனிமையே தனி. அந்த நிம்மதி ஹோட்டலில் தங்கினாலெல்லாம் வந்து விடாது.

''குமார்!'' மறுபடியும் அவனைக் கூப்பிட்டாள். ஆனால் வார்த்தைகள் உடனே வர மறுத்தன.

''குமார்! நீங்க ஹோட்டல்லே தங்கிடுங்க. நான் மங்களம் மாமி வீட்டுல தங்கிக்கிறேன். ஐ லைக் இட் தட் வே! அண்ட் குமார்! இந்த ஒரு தரம் நான் என் இஷ்டப்படி இருக்கணும். நான் தனியாகச் சில இடங்களுக்குப் போவேன். நான் படிச்ச ஸ்கூலுக்கு நான் படிச்ச காலேஜுக்கு, என் பழைய சிநேகிதி வீட்டுக்கு... ஐ வாண்ட் டுபி லெஃப்ட் அலோன். உங்க கூட இருக்கக் கூடாதுன்னு இல்லே. பட் ஐ கான்ட் எக்ஸ்ப்ளெய்ன் ஒய்! என்னைப் புரிஞ்சுக்கோங்க குமார்!'' திடீரென்று அவள் கண்கள் கலங்க ஆரம்பித்தன.

அவள் அவன் தோள்மீது சாய்ந்து கொண்டாள். அவன் ஆறுதலாக அவள் தோளைத் தடவினான்; அழுத்தினான்.

''ஐ அண்டர்ஸ்டாண்ட் உஷா!''

அந்த மூன்று வார்த்தைகளில் அவனுடைய பதிலே அடங்கி விட்டது. குமார் மற்றவர்களைப் போல் இல்லை. ரொம்ப வித்தியாசமானவன். பிறகு போய்ச் சேருகிறவரையில் அவர்கள் இருவரும் பேசவில்லை.

அவளுடைய விருப்பப்படி அவளை மங்களம் மாமி வீட்டில் இறக்கிவிட்டு, அவன் ஹோட்டல் மல்லிகாவில் போய்த் தங்கினான். பிறகு நான்கு நாட்கள் அவள் அவனைப் பார்க்கவேயில்லை. அவனுடைய ஹோட்டலுக்குக் கூட ஃபோன் பண்ணவில்லை. தான் படித்த ஸ்கூலுக்குப் போனாள். தான் படித்த கல்லூரிக்குப் போனாள். பிரபுவின் வீட்டுக்குப் போனாள். அவன் இன்னும் திருமணம் செய்து கொள்ள வில்லையாம். இரண்டு நாட்கள் அவனுடன் பீச்சுக்குப் போனாள். ஆனால் தவறு ஏதும் நிகழ்ந்துவிட வில்லை. பிரபு அவள் உணர்வுகளைப் புரிந்து கொண்டு கண்ணியமாக நடந்து கொண்டான்.

ரொம்ப நாட்களுக்குப் பிறகு ஓர் இடத்துக்கு வந்தால் அந்த இடம் மாறிப்போயிருப்பது தென்படுகிறது. பிறகு நினைவுகள்தான் மிஞ்சும். 'இது இப்படி இருந்தது. அது அப்படி இருந்தது. என்கிற நினைவுகள். 'ஸ்வீட் மெமொரீஸ், 'ஸ்வீட் மெமொரீஸ்' என்று சொல்கிறோம். ஆனால் அவைகளை ஆழ்ந்து நினைத்து விட்டால் மனசெல்லாம் கனத்துப் போய் விடுகிறது. அவை 'இனிமை'யாக இருந்து கொண்டே மனசில் காயத்தை ஏற்படுத்தி விடுகின்றன. அப்படியும் அந்த இனிமையே தனி.



ஐந்தாவது நாள். மாலை நேரம். அவள் மொட்டை மாடிக்குப் போனாள். அன்று வெள்ளிக் கிழமை. ஞாயிற்றுக்கிழமை காலை கிளம்பிவிடுகிறார்கள். இன்னும் ஒரே ஒரு நாள்தான் பாக்கி.

நேற்று பிரபு கேட்டான்: ''நீங்கள் இருவரும் ஏன் தனித் தனியாகத் தங்கியிருக்கிறீர்கள் உஷா?'' என்று.

''திருமணம் என்பது ஒரு பெண்ணின் வாழ்க்கையையே மாற்றி விடுகிறது பிரபு. மேரேஜ் இஸ் நோ டௌட், பியூடிஃபுல்! ஆனால் அது ஏற்படுத்தும் மாற்றங்கள்? என்னுடைய திருமணம் ஆகாத அந்தக் காலத்து நாட்களிடம் கற்பனையிலாவது ஒரே ஒரு வாரம் திரும்பிப் போக விரும்பினேன், பிரபு! அதே அனுபவங்களை வெறும் கற்பனையில் காண ஆசைப்பட்டேன்! என் பெற்றோர்கள் உயிருடன் இருந்திருந்தால் என் வீட்டிலேயே தங்கியிருப்பேன்! இப்பொழுது பக்கத்து வீட்டில் தங்கிக் கொண்டே என் வீட்டையும் அந்த நாட்களையும் அதே மாதிரி அனுபவிக்கிறேன்!'' சொன்னபோது அவள் குரல் கம்மியது. ஆனால் அவள் அழவில்லை.

இப்பொழுது நான்கு நாட்களாக குமாரை மறந்து போயிருந்ததை நினைத்தால் குற்றம் செய்துவிட்டது போலத் தோன்றுகிறது.

மாடிச் சுவரில் ஏறி உட்கார்ந்தாள். கற்பனைகள் உற்பத்தியாகின்றன. பழைய நினைவுகள் பொங்கி எழும்புகின்றன. வரும் அழுகையைக் கூட அமுக்கி விடும்படி மனசு அளவுக்கு மீறிக் கனத்துப் போயிருக்கிறது.

அப்படியே இருந்ததில் இருட்ட ஆரம்பித்தது கூட அவளுக்குத்தெரியவில்லை. அந்தக் காலத்தில் வானத்தைப் பார்த்து ரசிப்பாள். நட்சத்திரங்களைப் பார்த்து ரசிப்பாள். திருமணத்துக்குப் பிறகு இதெல்லாம் நேரமே இருந்ததில்லை. இப்பொழுது அந்தக் காலத்துக்குத் திரும்பியவளாக வானத்தை நிமிர்ந்து பார்த்தாள். இரண்டு நிமிடங்கள். திடீரென்று ஒரு வால் நட்சத்திரம் தென்படுகிறது. முதலில் அவள் அதைக் கவனிக்கவில்லை. இப்பொழுதுதான் அது அவள் மனசுக்கு எட்டுகிறது. காரணமில்லாமல் அது அவள் மனசைக் கீறல்களாக நிரப்புகிறது. 'சடா'ரென்று சுவரிலிருந்து குதித்துக் கீழே நின்றாள். பழைய கனவுகள் கலைய ஆரம்பிக்கின்றன. பிரபுவுடன் பீச்சுக்குப் போனதை நினைத்துப் பார்த்தாள். தவறு செய்துவிட்டாளோ? குமார் பொறுத்துக் கொள்வானா? தெரிந்தால் எவ்வளவு வேதனைப்படுவான்? அப்படியும் அவளை ஒன்றும் கேட்க மாட்டான். அவன் மனசு மட்டும் கனத்துப் போகும். இப்படித் தனியாகத் தங்குவதே அவள் வாழ்க்கையில் ஒருபுயலை ஏற்படுத்திவிடுமோ?

வால் நட்சத்திரம் என்றாலே நாட்டுக்குக் கெடுதல் என்பார்கள். 'கெடுதல்' என்று நினைப்புவந்தவுடனேயே அவள் வாழ்க்கையில்

ஏற்படப் போகும் 'கெடுதல்'தான் மனசில் முன்னே வந்து நிற்கிறது.

ஏனோ அவனைப் பார்க்க வேண்டும் போல் இருந்தது அவளுக்கு. கீழே சென்று, டெலிபோனில் அவனுடைய நெம்பரைச் சுழற்றினாள்.

''ஹலோ!'' அவன் எடுத்தான்.

''ஹலோ குமார்!'' அவனுடைய குரலைக் கேட்க அவளுக்கு ஆறுதலாக இருந்தது.

''என்ன உஷா? டெல் மீ?''

''உங்களுக்குக் கோபமா?''

''எதுக்கு?''

''நான் உங்களுடன் தங்காதது?''

''இல்லையே? ஏன்?''

''.......''

''யூ வான்டட் இட் தட் வே!''

''ஐ வான்ட் டு ஸீ யூ! எனக்கு உங்களைப் பார்க்க வேண்டும் போல இருக்கிறது.'' அவள் குரலில் ஒரு கெஞ்சல்.

''நாம்தான் ஞாயிற்றுக் கிழமை கிளம்பி விடுகிறோமே!''

''இப்பொழுது அங்கே வரட்டுமா?''

''இப்பொழுதா? என்ன திடீரென்று?''

''அதுதான் சொன்னேனே! ஐ வான்ட் டு ஸீ யூ!''

''கமான் உஷா! நாம புதிதாகக் கல்யாணமானவர்கள் இல்லை!''

''அங்கே வரட்டுமா?''

''எதுக்கு வரணும்? யூ ரிலாக்ஸ் நௌ நாளைக்கு வா!''

''பட் குமார்—''

''நான் இப்பொழுது என்னுடைய பழைய பிரண்ட் ஒருத்தனைப் பார்க்கப் போய்க் கொண்டிருக்கிறேன். ஐ'ல் ஸீ யூ டுமாரோ!''

ஃபோனைக்கூட வைத்து விட்டான். அவளுடைய முகம் விழுந்து போயிற்று. குழம்பிப்போனாள். அவன் வரவேண்டாம் என்று சொன்னதற்குக் காரணம் புரியவில்லை. ஏதாவது தவறு நிகழ்கிறதோ என்ற சந்தேகம் மனசின் ஆழத்தில் எழும்புகிறது. அவளுடைய கண்களில் ஒருவிதமான எரிச்சல் ஏற்பட்டது. உள்ளத்தில் புயல் வீசியது.

ஃபோனில் அவனுடைய குரலை மறுபடியும் கேட்க வேண்டும் போலிருந்தது. அந்தக் குரல்தான் அவளுக்கு ஆறுதல். அந்தக் குரல்தான் அவளுக்கு சுகம்.

அந்தக் குரல்தான் அவளுக்கு எல்லாமே. அந்த இனிமையைக் கேட்க வேண்டும். மனசுக்கு நிம்மதி வேண்டும்.

மறுபடியும் அவனுடைய நம்பரை டயல் செய்தாள்.

''குமார்?''

''யெஸ்!''

''கோபமா குமார்?''

''இல்லையேமா! நாட் அட் ஆல்!'' எவ்வளவு மென்மையாகச் சொல்கிறான்!

அவள் உற்றுக் கவனித்தாள். ஒரு பெண்ணின் குரல் கேட்கிறதே அவனுக்குப் பக்கத்தில்? என்னவோ பேசுகிறாள். நன்றாகக் கேட்கிறது.

இப்பொழுது அவள் மனசில் நிஜமாகவே கிலி ஏற்படுகிறது. நீங்களா குமார்? நீங்களா? எதுவுமே கேட்காமல் ஃபோனை வைத்துவிட்டாள். நடப்பதைத் தாங்க முடியாமல் கண்களிலிருந்து கண்ணீர்த் துளிகள் கொட்டுகின்றன.

உடனே கிளம்பினாள். டாக்ஸி பிடித்துக் கொண்டு ஹோட்டல் மல்லிகா போனாள். வேகமாகப் படி ஏறிச் சென்றாள். நடையில் ஒரு வேகம். மனசில் கூட வேகம்.

ஆனால் அவனுடைய அறை வந்தபோது உள்ளே போகத் தயக்கம். பேச்சுக் குரல் கேட்கிறது.

''கிளம்பி விடு கிரிஜா! மை ஒய்ஃப் வான்ட்ஸ் டு கம் ஹியர்! எனக்கும் அவளைப் பார்க்க வேண்டும் போல இருக்கிறது. என்னுடைய கடந்த காலத்தில் உன்னைக் காதலித்தேன்! பட் ஐ லவ் உஷா ஆல்ஸோ! இந்த ஒரு நாள் அவளுக்குத் துரோகம் செய்தது போதும்! பட் என்றும் உன்னை மறந்துவிட முடியாது, கிரிஜா! நீயும் என்னை மறந்துவிடாதே! கடைசியாக கேன் யூ ஹோல்ட் மை ஹேண்ட்?'' குமாரின் குரல்.

''இது நம்முடைய கடைசிச் சந்திப்பு என்று நினைத்தால் மனசு கஷ்டப்படுகிறது குமார்! நிச்சயமாக நான் கல்யாணம் செய்துக்க மாட்டேன். ஆனால் அடிக்கடி என் நினைவு உங்களுக்கு வரவேண்டும் குமார் ஓகே?'' கிரிஜாவின் குரல்.

உஷா அதற்கு மேல் அங்கே நிற்கவில்லை. போய்விட்டாள். அவள் அவனைக் கேள்வி கேட்க விரும்பவில்லை. ஒரு குற்றவாளியைக் கேள்வி கேட்க இன்னொரு குற்றவாளிக்கு உரிமை ஏது? ஆனால் அவனுடன் ஒரு நாள் வாழ்ந்தாளுமே? அதனால் அவள் வாழ்நாளெல்லாம் இவனையே நினைத்துத் திருமணமே செய்து கொள்ளமாட்டாளாமே! நினைத்தால் அழுகை அழுகையாக வந்தது. போகும் வழியிலெல்லாம் கண்ணீர்த்துளிகள் கொட்டுகின்றன.

வீட்டை அடைந்தாள். குமாரிடமிருந்து ஃபோன்.

''நீ இங்கே வருகிறாயா இல்லை நான் அங்கே வரட்டுமா?'' ரொம்ப ஆசையாகக் கேட்டான்.

''நானே வருகிறேன்!'' எதுவுமே தெரியாத மாதிரி பதில் சொன்னாள்.

உடனே கிளம்பினாள்.

---




இப்போதெல்லாம் 'கல்கி'யில் சினிமாச் செய்திகள் அதிகமாகி விட்டன என்று கூறுவதை விட, 'காலத்திற்கேற்ப' கல்கி தன்னை மாற்றிக்கொண்டு விட்டது என்பதுதான் பொருத்தம். ஆனால் சினிமாச் செய்திகளைக் கூடச் சுவை படத்தருவதில் கல்கியின் பாணியே தனிதான்.

'கடுகு பதில்கள்' ஒரு பக்கம் போதாது. நகைச்சுவை உணர்ச்சியுடன் அளிக்கப்படும் பதில்களில் காரமும் உண்டு!

தலையங்கம் - நேரத்திற்கேற்ற பிரச்னைகளை அரசியல் சார்பில்லாது. பொதுப்படையான கருத்தை பொறுப்போடு எடுத்துக்காட்டுவது பாராட்டத்தக்கது.

எஸ். ரகுநாதன், புதுடில்லி 5

## இன்றைக்கு ஒரு ட்ரைசைக்கிள்...நாளைக்கு ஒரு ஸ்கூட்டர்.
## உங்கள் பாசத்திற்கும்...ஸ்டேட் பாங்குக்கும் உளங்கனிந்த நன்றி.

ஒரு குழந்தையின் தேவைகள் காலப்போக்கில் மாறிக்கொண்டே இருக்கின்றன.

பெற்றோரின் விருப்பமோ என்றுமே மாறாமல் இருக்கிறது.

பெற்றோர்கள் தாங்கள் நேசிப்பவர்களின் மகிழ்ச்சிக்குத் தேவைப்படும் எல்லாவற்றையும் தருவதற்குப் பாடுபடுகிறார்கள்.

விலை எதுவாயினும் சரி, எந்தத் தியாகமும் செய்யத் தயாராக இருக்கிறார்கள். அவர்களுடைய ஒரே குறிக்கோள் இளம் குழந்தைகள் முகம் மலர்ந்து அகம் குளிர வாழவேண்டுமென்பதே.

அதுவே அவர்கள் அளிக்கும் அன்புப் பரிசு.



உங்கள் குழந்தைகளின் மகிழ்ச்சி துள்ளும் குழந்தைப் பருவத்திலும் வருங்காலத்திலும் வளமையான வாழ்வுக்கு வித்திடுவதற்கு வேண்டிய எல்லாத் தேவைகளையும் தருவதற்கு ஸ்டேட் பாங்கில் சேமித்து வாருங்கள்.

உங்களுடைய ஒவ்வொரு கனவும் நிறைவேற எங்களிடம் திட்டம் இருக்கிறது.

உங்கள் குழந்தையின் இன்றைய, வருங்காலக் கனவு நனவாக சிந்திக்க வைக்கும் எங்களது பல வகைத் திட்டங்களிலிருந்து பொருத்தமான ஒன்றைத் தேர்ந்தெடுங்கள்.

*இன்வெஸ்ட்மென்ட் பிளான் (மறு முதலீட்டுத் திட்டம்). ரெக்கரிங் டெபாசிட் ஸ்கீம் (தொடர் வைப்பு நிதித் திட்டம்). சேவிங்ஸ் அக்கவுண்ட் (சேமிப்புக் கணக்கு). டெர்ம் டெபாசிட் (தவணை வைப்பு நிதி). மைனர்ஸ் அக்கவுண்ட் (வயதுக்கு வராதோர் கணக்கு). இளதா டெபாசிட் (இளதா சேமிப்புத் திட்டம்). பெரன்னியல் பென்ஷன் பிளான் (நிரந்தர ஓய்வூதியத் திட்டம்). கேஷ் சர்டிபிகேட் ஸ்கீம் (ரொக்கச் சான்றிதழ் திட்டம்).

சேமிப்பதற்கு



# ஸ்டேட் பாங்க்

இந்தியாவின் மிகப் பெரிய பாங்க்

CHAITRA-SBI-623 TAM



Dr. S. R. சிவராஜ்

வாலிபர்கள் ! மணமானவர்கள் !!

வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள பலஹீனங்களை நீக்கி,
தாம்பத்திய வாழ்வை இன்பமுடன் அனுபவித்து மகிழ,
இன்றே புகழ் பெற்ற 'ரகசிய வியாதி நிபுணர்'
ஆண்மைக் குறைவு நீக்கும் 'அரிய வைத்திய மேதை'

## 'கவிராஜ்' டாக்டர் S. R. சிவராஜ், R.I.M.P.

அவர்களிடம் சிறந்த முறையில் சிகிச்சை பெற, அவர் சுற்றுப்பயண முகாம்களில் நேரில் சந்தித்து வாழ்வில் மகிழ்ச்சி காணுங்கள். நேரில் சந்திக்க முடியாதவர்கள், குறைகளை விபரமாகத் தலைமை அலுவலகத்துக்கு எழுதவும். (கடிதங்கள் ரகசியமாகப் பாதுகாக்கப்படும்.) மருந்துகள் விரிவான விளக்கங்களுடன் வி.பி.பி. மூலம் அனுப்பி வைக்கப்படும்.

- குழந்தை பாக்கியம் (கர்ப்ப அணுக்கள்) இல்லாதவர்கள்
- கல்யாணமாகி பல ஆண்டுகளாகக் குழந்தை பாக்கியமே இல்லாதவர்கள்

சிறந்த முறையில் சிகிச்சை பெற்று, கர்ப்ப அணுக்கள் தேவையான அளவு உற்பத்தியாகி குழந்தை பாக்கியம் பெற்று மகிழ்ச்சியடையும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். 25 வருட சுற்றுப் பயணத்தில், அவரிடம் சிகிச்சை பெற்றுப் பலன் அடைந்தவர்கள் பல்லாயிரம் பேர்கள். அவர்களைப் போல் நீங்களும் பலன் அடைய வேண்டுமல்லவா?

**விரைவில் பலன் காண விசேஷ 1 மாத சிகிச்சை ★ குறைந்த ஸ்பெஷல் 1 மாத சிகிச்சை**

| A-வகுப்பு | B-வகுப்பு | C-வகுப்பு | மீடியம் | ஸ்பெஷல் | 1-ம் நெம்பர் | நேரில் பெறலாம் |
|---|---|---|---|---|---|---|
| ரூ. 350-00 | 250-00 | 175-00 | 115-00 | 90-00 | 75-00 | V.P.P.யிலும் பெறலாம் |

தலைமை அலுவலகம் :

**சிவராஜ் சித்த வைத்தியசாலை**

C-56, தமிழ்ச் சங்கம் ரோட் பின்புறம்
(சென்ட்ரல் டாக்கீஸ் வடபுறமுள்ள ஏரியின் முன் பக்கம்)
காந்தி ஸ்டேடியம் — சேலம்-636007

---

# மூல நோயை

முற்றவிடாமல்
நம்பிக்கையான

# ஹெடன்ஸா

களிம்பு
உபயோகித்து
நிவாரணம்
அடையுங்கள்;
—ரண
சிகிச்சையையும்
தடுங்கள்

2141

---

# Kyphi

**GIFT PACK of PERFUME SPRAYS**

Be it a marriage or a birthday
This is a gift for all occasion
Kyphi Giftpack...
a gift to remember...

*Available at :*

**FRAGRANCE**
C-52, Annanagar, Madras-600 102



ஈஸ்வரி லெண்டிங் லைப்ரரி உரிமையாளர் பழனி

அம்பாஸிடர் கார் ஓசைப்படாமல் இங்கு வந்து நிற்கிறது. பத்து வயது மதிக்கத் தக்க சிறுமி குதித்துக் கொண்டு வந்து இறங்குகிறாள். படபடவென்று வேகத்துடன் ஒரு 'மோட்டார் பைக்' வருகிறது. மீசை வைத்துள்ள ஓர் ஆடவன் தன் மனைவியுடன் உள்ளே நுழைகிறார். சில நிமிடத்துக்கெல்லாம் மௌனமாக ஒரு குடும்ப ஸ்திரீ வருகிறாள். உள்ளே இருக்கும் கும்பலைக் கண்டு தயங்குகிறாள்.

எந்த இடம் இது? துணிக் கடை? நகைக் கடை? குறைந்த பட்சம் கட் பீஸ் ஷாப்? —ஊஹூம். இது எதுவும் இல்லை — அது ஒரு 'லெண்டிங் லைப்ரரி'; அவ்வை ஷண்முகம் ரோட்டின் மையமான இடத்தில் ஈஸ்வர லெண்டிங் லைப்ரரி இருக்கிறது.

உரிமையாளர் திரு பழனியைச் சந்திக்கிறோம்.

1966ல் ஒரு சாதாரண பழைய புத்தக வியாபாரியாக இருந்தார். இன்று கிட்டத் தட்ட 20000க்கும் மேற்பட்ட தமிழ், லட்சம் ஆங்கிலப் புத்தகங்களுக்கு உரிமையாளராகத் திகழ்கிறார். புத்தகங்கள் தவிர பத்திரிகைகள், காமிக்ஸ் ஆகியவைகளை விரும்பும் வாசகர்களையும் ஈர்க்கிறார். வாசகசாலையில் சேர டெபாஸிட் ரூ. 10. தவிர ஒரு புத்தகத்துக்கு ரூ. 0.50 சார்ஜ், படிக்க. புத்தகத்தின் தன்மை, வைத்திருக்கும் காலம் இவைகளை வைத்துச் சில சமயம் தொகை கூடும்.

கே: முன்னைக்கு இப்போது வாசகர்கள் அதிகரித்துள்ளார்களா?

நிறைய, ஆனால் வாங்கின புத்தகத்தை அப்படியே குறித்த காலக் கெடுவில் திருப்பித் தருகிற மனோபாவம் குறைந்துள்ளது. அதே சமயத்தில் வெளியூர் வாசகர்கள் தாமதமின்றித் திருப்பித் தருகிறார்கள். (குறிப்பாக கோயம்புத்தூரில் மெம்பர்கள் அதிகம். ஏன், ராஜஸ்தானிலிருந்து கூட ஒருத்தர் சேர்ந்துள்ளார்.)

கே: பெருவாரும் வாசகர்களை எவ்விதம் சமாளிக்கிறார்?

வாரப் பத்திரிகைகளில் (ஆங்கிலம் உட்பட) 40, 50 பிரதிகளுக்குக் குறையாமல் வாங்குகிறார். வீட்டில் கொடுத்துவிட்டு வர ஏற்பாடு செய்கிறார். பிரபலமான புத்தகங்கள் பத்து அல்லது பதினைந்து பிரதிகள் வாங்குகிறார். ஆனால் இந்தப் பத்திரிகை விநியோகம் ஒரு 'சேவை' மாதிரிதான் செய்து வருகிறாரே தவிர, புத்தகங்களுக்காகத்தான் லைப்ரரிக்கு மவுசு.

கே: தமிழ், ஆங்கிலம் மட்டும்தானா?

ஊஹூம். தெலுங்கு, கன்னடம், மலையாளம் கூடத்தான். இவைகளில் பத்திரிகை வாங்குவது கிடையாது. புத்தகங்கள் மட்டும்தான். வெறும் கேள்வி ஞானம், அஸிஸ்டெண்ட் மூலம் இந்த வகையினரைச் சமாளிக்கிறார்.

கே: புஸ்தகங்களை விலைக்கு மட்டும் வாங்குவதுதான் பழக்கமா?

கிடையாது. எல்லாப் பிரபல பத்திரிகைகளில் வரும் தொடர் கதைகளை உடனுக்குடன் பைண்ட் செய்து வைத்துள்ளார். (தொட்டால் உதிர் உதிராய்ப் பொடியும் பழைய ராமமூர்த்தியிலிருந்து எஸ். வி. வி., சுஜாதாவின் கொலையுதிர் காலம் வரை இருக்கிறது.) புடவைக்காரர் சரக்கை வீசிப் போடுவது மாதிரி புத்தகங்களை அருகருகே வைக்கிறார், வாடிக்கையாளர் பார்வையை ஈர்க்கிறார். இந்த லைப்ரரிக்கு வராதவர்களே கிடையாது. பிரபல எழுத்தாளர்கள், சினிமா நடிகைகள் (குறிப்பாக ஸ்ரீப்ரியா) எல்லாரும் இங்கு விஜயம் செய்ததுண்டு. மறைந்த ராஷ்டிரபதி திரு கிரி வந்திருக்கிறார். கிரியுடன் எடுத்துக் கொண்ட புகைப்படம் ஒன்று மாட்டப்பட்டிருக்கிறது.

ஓர் அரை மணி நேரமே இருந்தாலும் நமக்கு லேசாகப் பிரமிப்புத் தட்டுகிறது. மேல் கல்வி இல்லாமல், தடபுடலாக ஆங்கிலத்தில் பேசாமல் எப்படி இத்தனை வாசகர்களை ஈர்க்கும் அளவுக்கு ஒரு வாசகசாலையைத் தொடர்ந்து வெற்றிகரமாக நடத்தி வருகிறார் என்கிற பிரமிப்பு.

சரி, இத்தனை தெரிந்து வைத்திருக்கிற பழனிக்கு விருப்பமான எழுத்தாளர் யார்?

தீபம் பார்த்தசாரதி.

# லட்சம் புத்தகங்களின் உரிமையாளர்!

# புதியது! DUNLOP

# G.18C NYLON

## அதிக பட்ச கேஸிங் பயனை உறுதியாக அளிக்கும் மிகவும் நம்பக்கூடிய தன்மையுள்ள கேஸிங்

புதிய ஜி 180 நைலான் அதிகபட்ச ரீட்ரெட்டுகளை அளிப்பதற்கென பிரத்யேகமாக உருவாக்கப்பட்ட தனிச்சிறப்புள்ள 14PR நைலான் கேஸிங்குடன் கூடிய டயர். இதனால் நீங்கள் ரீட்ரெட் செய்யாவிட்டாலும், உன்னதமான ஜி 180 கேஸிங்கிலும் உயர்ந்த கேஸிங் பயனை அடைவீர்.

அதோடு கூட ஜி 180 அளிக்கும் புதிய காடு முரடான ட்ரெட் பாட்டர்ன், அத்துடன் இறுக்கமான ஓட்டத்தைதரும் ரப்பர் காம்பௌண்ட் ஆகியவை களின் காரணமாக ஒரே சீராக அதிக ஆரம்ப மைலேஜ் உறுதியளிக்கப் படுகிறது.

புதிய ஜி 180 நைலான் அதிகபட்ச ரீட்ரெட்கள், அதிக ஆரம்ப மைலேஜ் — ஆகியவைகளுக்கென பிரத்தியேகமாக உருவாக்கப்பட்டது. சுருக்கமாகச் சொல்லப்போனால் ஒரு கிலோ மீட்டருக்கு ஆகும் செலவு குறைகிறது.

**உன்னத இயக்கத்திற்கு அசல் டன்லப் புதில் ட்யூபுகள் மற்றும் ஃப்ளாபுகளை உபயோகியுங்கள். அத்துடன் குறைந்த பட்ச நீளும்தன்மை அதிகபட்ச ஆயுளுக்கு டன்லப் மாக்ஸ் லைஃப் பாலிபெஸ்டர் கார்ட் ஃபான் பெல்ட் உபயோகியுங்கள்.**

**D DUNLOP**

**சிறந்ததை வாங்கிடுவீர், வாங்கிடுவீர் டன்லப் டயர்ஸ்**

DT/CAS-3/80 TAM

# வட்ட மேஜை

# வாசகர்கள்


1


2


3

● ஒரு கதையோ, கட்டுரையோ படித்தவுடன் ''பிரமாதம்!'' என்றோ அல்லது ''சுத்த மோசம்'' என்றோ வித விதமான அபிப்பிராயம் வாசகர்களுக்கு எழக் கூடும் ஆனால் எத்தனை வாசகருக்குத் தன் கருத்தை உடனடியாக எழுதி 'போஸ்ட்' பண்ண கை வருகிறது? இப்படி வரும் கடிதங்கள்தாம் வாசகர்களின் 'நாடி'யைத் தெரிந்துகொள்ளப் பத்திரிகைகளுக்கு உதவுகின்றன. பிரபல ஆங்கிலப் பத்திரிகை ஆசிரியர்குஷ்வந்த் சிங் காட்டமாகத் தாக்கி வரும் கடிதங்களைப் பெரிதும் ரசிப்பாராம். ஒரு சமயம் கருச்சிதைவு குறித்துப் பல கட்டுரைகளைத் தாங்கி 'வீக்லி' வெளிவந்தவுடன் அவருக்கு வந்த கடிதம்: ''இந்தக் கட்டுரைகளைப் படித்து உங்கள் தாயார் முன்பே கடைப்பிடித்திருந்தால் உங்களைப் போன்ற ஆசிரியரின் ரோதனையிலிருந்து நாங்கள் தப்பித்து இருக்கலாம்!'' இதே போல் பிரபல தமிழ் வார இதழ் வெகு காலம் முன்பு ''புதிய துணைவேந்தர் தேவை'' என்று தலையங்கம் எழுதியபோது சூடாக வந்த கடிதம்: ''...பத்திரிகைக்குத் தான் புதிய ஆசிரியர் தேவை!''

தற்போது தமிழ்ப் பத்திரிகைகளில்--குறிப்பாக கல்கி வட்டமேஜையில் வரும் கடிதங்கள் பகுதியைப் பார்த்தால் ஒருசிலர் அடிக்கடி எழுதுவதைக் கவனித்திருக்கக் கூடும். இவர்களில் குறிப்பிட்ட சிலரைப் பற்றித் தகவல்கள் கேட்டு அறிந்தபோது:

● **வேலாயுதம்பாளையம், சம்பத்:** திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்தஇவர் 1975லிருந்து கடிதம் எழுதி வருகிறாராம். தொழிலாளர் கூட்டுறவு சங்கத்தில் பணியாற்றுகிறார். இதுவரை சுமார் 300 கடிதங்கள் பிரசுரம் ஆகியுள்ளன. கவிதை எழுதுவதில் ஆர்வம் உள்ளவர். திருச்சி வானொலியில் கவிதைத் தொகுப்பு நிகழ்ச்சி வழங்கியுள்ளார்.

● **திருவனந்தபுரம், எஸ். எஸ். மணி:** இருபது ஆண்டுகளுக்கும் மேலாக எழுதி வருகிறார். (கேள்விகள்: கடிதங்கள்; துணுக்குகள்) இவையெல்லாம் சேர்ந்து மூவாயிரத்துக்கும் மேல் பிரசுரம் ஆகியிருக்கு[illegible] அமரர் ராஜாஜிக்குத் தபால் தலை வெளியிட வேண்டும் என்று மத்திய அரசுக்கு எழுத அதற்கு அவர்கள் சம்மதம் தெரிவித்து எழுதியதைப் பெருமையுடன் நினைவுகூர்கிறார். இவருக்குத் திருமணமான போது. 'ராணி' இதழ் இவர் புகைப்படத்தைக் கேட்டுப் பிரசுரித்து ஒரு வாசகர் என்று கௌரவித்தது.

● **அரகண்டநல்லூர், பிரதாப் சிங்:** தினமலர் நாளிதழ் நிருபராகப் பணிபுரியும் இவர் தேசிங்கு ராஜா வம்சத்தைச் சேர்ந்தவராம். தாய் மொழி: இந்தி. கடந்த ஐந்து ஆண்டுகளாகத்தான் எழுதி வந்தாலும் 'ஸ்கோர்' அதிகம். 1000! எல்லாப் பத்திரிகைகளையும் அவை வெளியான தினமே படித்து விமர்சனக் கடிதம் எழுதுவதில் இவருக்குக் கொள்ளை இன்பமாம். 24 வயது இளைஞரான இவர் ''உடலைக் கெடுக்கும் பானங்கள், போதைப் பொருள்கள், மனத்தைக் கெடுக்கும் திரைப்படங்கள் — இவைகளைத் தவிர்த்துப் பத்திரிகை வாங்கிப் படியுங்கள்!'' என்று இளைஞர் சமுதாயத்துக்கு வேண்டுகோள் விடுக்கிறார்.

('பத்திரிகைகள் மட்டும் இப்போது என்ன வாழுகிறதாம்!' என்று சிலர் நீட்டி முழக்குவது காதில் விழுகிறது!)

● **மேட்டுப்பாளையம், பி. ஏ. வதூத்:** தமிழ் நாடு மின் வாரியத்தில் இளநிலை உதவியாளராக வேலை பார்க்கும் இவர் ரொம்ப சிரத்தை உள்ளவர் போலும்! அண்மையில் வெளியான பத்திரிகைகளில் ரக வாரியாகப் பட்டியல் போட்டுத் தந்திருப்பவர் இவர்


4

1. எஸ். எஸ். மணி
2. எம். சம்பத்
3. ஏ. கே. சங்கர்
4. பூவை விமலன்
5. பி. ஏ. வதூத்
6. பிரதாப் சிங்
7. மயிலை ரகு
8. எல். ஆர். சுந்தரராஜன்


5


6


7



ஒருவர்தான். துக்ளக் ஒன்பதாவது ஆண்டு விழா கோவையில் நடைபெற்றபோது இவர் பேசியிருக்கிறார். நிறைய எழுத வேண்டும் என்ற ஆர்வம் அதிகம்.

வெளியூர் வசகர்களை ஒப்பிடும்போது சென்னையில் வசிக்கும் வாசகர்களின் பங்கு பொதுவாகவே குறைவுதான்.

● **எல். ஆர். சுந்தரராஜன், பட்டினப்பாக்கம்:** பி. காம். பட்டதாரி. சேப்பாக்கம் தலைமை பொறியாளர் அலுவலகத்தில் உதவியாளர். கடிதங்கள் தவிர 'விசிட்டரி'ல் ஒரு கட்டுரையும் எழுதியுள்ளார்.

● **பூவைவிமலன், பூவிருந்தவல்லி:** ஒய். எம். சி. ஏ. பட்டி மன்றதுணைச் செயலாளராகப் பணி புரியும் இவர் கடிதம் முதலில் பிரசுரமானது கல்கியில். (கிட்டத்தட்ட 40 கடிதங்கள் பிரசுரமாகியுள்ளன.) ஜர்னலிசம் படித்துக் கொண்டே கதை எழுதவும், தொடர்ந்து முயற்சி செய்து கொண்டு வருகிறார். வெற்றி காண வாழ்த்துக்கள்!

● **ரகுராமன், (மயிலை ரகு):** வ. மே. வாசகர்களில் ரொம்ப 'லேட்'டாகச் சேர்ந்தவர் இவர்தான். (ஏனென்றால் முதல் கடிதம் பிரசுரமானதே குங்குமத்தில்தான்) இனியும் ஐம்பதைத் தாண்டியுள்ளார். (வயது அல்ல!) தனியார் நூலகத்தில் வேலை பார்க்கும் இவருக்குக் கதை எழுத ஆர்வம் உண்டு.

● **ஏ. கே. சங்கர், குரோம்பேட்டை:** இளைஞர்; பிளஸ் டூ படிக்கும் மாணவர்! குமுதத்தில் ஒரு துணுக்கு பிரசுரமாகியுள்ளது (1978) மொத்தம் முப்பதுக்கு மேல் — துணுக்கு, கடிதங்கள், கேள்விகள் — இது வரை பிரசுரம் ஆகியிருக்கும். எழுத ஆர்வம் உண்டு.

கடிதங்களைப் படித்துப் பார்த்தால் ஒன்று புலப்படுகிறது. சென்னை வாசகர்கள் ஒரு கடிதம் பிரசுரம் ஆனவுடன் கதை எழுதவும் முயற்சி செய்ய ஆரம்பித்து விடுகிறார்கள். (அல்லது எழுத்தார்வத்தினாலேயே கடிதம் எழுதுகிறார்களா?) வெளியூர் வாசகர்கள் நிச்சயம் அந்த ரகம் இல்லை. 'என் கடன் படித்து ரசிப்பதே' என்ற ஒரே நிச்சயத்துடன், உறுதியுடன் விமரிசித்து வருகிறார்கள்.

மேற்சொன்ன எட்டு வட்ட மேஜை எழுத்தாளர்களுக்கும் தலா ஒரு கட்டு கார்டு பரிசாக அனுப்பப்படுகிறது!

## இந்த இதழின் தயாரிப்பில்....

“என்னென்னவோ சிறப்பிதழ்களை வெளியிடுகிறீர்களே; வாசகர் சிறப்பிதழ் என்று ஒன்று பிரசுரித்தால் என்ன?” என்பதாக முதலில் யோசனை கூறிக் கடிதம் எழுதியவர் ஏ. வி. எம். கணேஷ். 'சந்தர்ப்பம் வரட்டும்' என்று அந்தக் கடிதத்தைப் பத்திரப்படுத்தி வைத்திருந்தேன். சில காலத்துக்குப் பிறகு, வாதூலன் என்றபுனை பெயரில் எழுதும் ஈ. லட்சுமணனும் சாருகேசி என்ற புனை பெயரில் எழுதும் விசுவநாதனும் சேர்ந்து இதே கருத்தை வெளியிட்டு ஒரு கடிதம் எழுதியிருந்தனர். இருவரும் இணை பிரியா நண்பர்கள். இனியும் தாமதிப்பது சரியல்ல என்று மூவரையுமே அழைத்து வாசகர் சிறப்பிதழைத் தயாரிப்பதில் ஒத்துழைக்குமாறு வேண்டினேன். அவர்கள் தெரிவித்த பல ரசமான அம்சங்களில் சில இங்கு நிறைவேறியுள்ளன. மற்றவை பின்னால்....!

✖ ஏ.வி.எம். கணேஷ்



திரு லட்சுமணன் (வாதூலன்) கானரா பாங்கில் அதிகாரி. இருபது ஆண்டுகளுக்கு மேலாகச் சிறுகதைகள், நாடகங்கள் எழுதி வருகிறார். அனுபவங்களைச் சிறுகதைகளாக அமைப்பதில் கைதேர்ந்தவர். சாருகேசி என்ற புனைபெயரில் ஒளிந்திருக்கும் விசுவநாதன் சிறந்த நகைச்சுவையாளர். இவ்வாண்டு அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் ஹாஸ்யக் கதைக்குப் பரிசு பெற்றவர். ஃபைசர் மருந்து தயாரிப்பு நிறுவனத்தில் பணியாற்றி வருகிறார். ஏ.வி.எம். கணேஷ் இதுவரை 32 சிறுகதைகளை அச்சில் பார்த்திருக்கிறார். இந்த எண்ணிக்கை வெகு துரிதமாக அதிகரித்துக் கொண்டும் வருகிறது. கல்கி, கதிர், சாவி இதழ்களில் சிறுகதைப் போட்டிகளில் பரிசு பெற்றிருக்கிறார். நாவல் எழுத வேண்டும் என்ற ஆசையில் விட்ட வெள்ளோட்டம் கலைமகள் குறுநாவல் போட்டியில் மூன்றாவது பரிசை இழுத்து வந்துள்ளது. தமிழக அரசின் தலைமைச் செயலகத்தில் ஊர் வளர்ச்சித் துறையின் விளம்பர உதவியாளராகப் பணியாற்றுகிறார்.

இந்த இதழைத் தயாரிக்க உதவிய இம்மூவருக்கும் கல்கி வாசகர்கள் சார்பில் நன்றியும் வாழ்த்துக்களும் தெரிவிக்கிறேன்.

-ஆசிரியர்.

✖ வாதூலன்



✖ சாருகேசி



# வட்ட மேஜை



ஆட்சிக்கு வந்து ஒன்பது மாதத்தில் சாதித்தது இதுதான் என்று ஒன்றே ஒன்றைக் கூடச் சுட்டிக் காட்ட முடியாமல் — சாதிக்க முடியாமல் போனது ஏன்? என்ற வினாவுக்கு விடை தேடுவதிலேயே மூப்பனார் தீவிரமாக இருக்கிறார் என்பது அவரது பேட்டியில் தெளிவாகிறது. சட்டியில் இல்லாத சாதனைக்கு அகப்பையைப் போட்டுக் குடைவதேனோ?

சிதம்பரம் — சிவ. ராஜகுமார்

பன்னிரு ஆண்டுகளுக்கு முன் குமுதத்தில் சுஜாதாவின் முதல் கதையான 'ராகவேனியம் 277' என்ற விஞ்ஞானக் கதையைப் பாராட்டி எழுதியிருந்தேன். அப்போது நான் விஞ்ஞான மாணவன். இப்போது நான் ஒரு விஞ்ஞான ஆசிரியன்.

ஜெயசுதா எழுதிய விஞ்ஞானக் கதையைப் படித்தவுடன் பாராட்டக் கைகள் பரபரத்தன. விடிவெள்ளியின் எக்ஸ்பயாலஜியையும் மனித ஆத்மாவையும் மிகச் சிறப்பாக இணைத்துள்ளார். ஆறறிவு படைத்த அனைவருக்கும் காதல், கோபம், தாபம், வெறுப்பு, பொறாமை போன்ற உணர்ச்சிகள் ஒன்றே என்ற அடிப்படை பாராட்டும் வகையில் கையாளப்பட்டுள்ளது. இயல்பான நடையில் தெளிவாகச் சொல்லப்பட்ட கதை ''உருவங்கள் மாறலாம், உணர்ச்சிகள் மாறுவதில்லை''

மதுரை-9 — எஸ். கே. ராமகிருஷ்ணன்

''ஆக்ஸிடெண்ட்'' நடந்துவிடப் போகிறது நடந்துவிடப் போகிறது என்று சஸ்பென்ஸ் அதிகரித்தாலும் நினைத்த மாதிரி நடந்துவிடவில்லை என்றதும் பெரிய நிம்மதி.

மேட்டுப்பாளையம் — பி.ஏ. வதூத்

ஹேமா ஆனந்ததீர்த்தனின் ஆக்ஸிடெண்ட் குறுநாவல் சபல புத்தி படைத்த ஒருசில பெண்களுக்குப் பாடம்; படிப்பினை, அறிவுரை. இறுதிவரை விறுவிறுப்போடு சென்றது. ஆண்மையைப் போற்றி எழுதியமைக்கு நன்றி கூறுகிறேன்.

ஒண்டிப்புதூர் — சிந்தாமணி ஹக்கீம்

தீபாவளிச் சிறப்பிதழ் முழுவதும் அட்டைப் படத்தைப் போலவே சுடர் விட்டுப் பிரகாசித்தது. முத்து முத்தான சிறு-கதைகள்.

முழு நாவலின் ரியலிஸத்தை ரசிக்க முடியாத அளவுக்கு 'ஆக்ஸிடெண்டின்' நிறம் பச்சை!

சென்னை-38 — சரோஜா ராஜாராமன்

முன்னாள் கவர்னருக்கு நியாயமான அனுதாபங்கள். இன்னாள் கவர்னருக்குக் கௌரவமான அறிமுகம்! கல்கி பாணி, ஸாரி, கல்கிப் பணி சுவையானதுதான்!

பொன்மலை — பி. லக்ஷ்மிநாராயணன்

நடுநிலையில் நின்றுதானே செயல்பட்டேன். எல்லாக் கட்சிகளையும் சமமாகத்தானே நடத்தினேன். என்னை ஏன் பதவி நீக்கம் செய்துவிட்டார் ஸ்ரீமதி காந்தி? இப்படி அப்பாவித்தனமாகக் கேட்கிறார் பட்வாரி. வேறென்ன குற்றம் செய்ய வேண்டுமாம்? மத்தியில் ஆளும் கட்சிக்கு ஜால்ராவாக இருக்க இணங்காத ஒரு குற்றம் போதாதோ?

சென்னை-45 — ஆர். ரவி

அக்டோபர் 29ந் தேதி சென்னை ராஜாஜி மண்டபத்தில் 'விலக்கப்பட்ட' கவர்னர் திரு பிரபுதாஸ் பட்வாரிக்குப் பிரிவுபசார விழா நடந்தது. ஆயிரக் கணக்கில் மக்கள் குழுமி அவர் உள்ளே நுழையும்போதும், கூட்டம் முடிந்து காரில் ஏறும்போதும் ''பட்வாரி ஜிந்தாபாத்'' என்று குரல் எழுப்பினர். மாலை அணிவித்தும், காலைத் தொட்டுக் கும்பிட்டும் தங்கள் உணர்ச்சிகளை வெளிக்காட்டினர்.

அந்நாள்வரை அன்றாடம் திரு பட்வாரியின் உருவத்தைக் காட்டி மகிழ்ந்த தொலைக்காட்சி நிலையத்தார் அன்று ராஜாஜி மண்டபம் பக்கமே வரவில்லை! மறு நாள் காலை சென்னை வானொலி நிலையத்து மாநிலச் செய்தியிலும் இது பற்றி மூச்சு விடவில்லை. நல்லவேளை பத்திரிகைகள் இருக்கின்றனவோ பிழைத்தோமோ!

சென்னை-5 — எஸ். வாணி சங்கர்

ரேகனின் வெற்றியை கல்கி தீர்க்க தரிசனத்துடன் கணித்து வைத்திருந்ததோ! கார்ட்டூனில் நடக்கிற ரேஸில் கழுதையை முந்திக்கொண்டு யானையின் துதிக்கை ஒரு சென்டி மீட்டருக்கு வெற்றிக் கம்பத்தைச் சமீபித்துள்ளதே!

அரகண்டநல்லூர் — கே. பிரதாப் சிங்

'காலேஜ் காம்பஸ்' பகுதியில் கதை, கவிதை என்று அரைத்த மாவையே அரைக்காமல், பேட்டி, மாடர்ன் ஆர்ட் என புதுமையான படைப்புக்களைத் தந்த லயோலா கல்லூரி மாணவர்களுக்கு ஒரு சபாஷ்!

சென்னை — கலாமூர்த்தி

கல்கி தீபாவளி மலர் கண்டேன். காஞ்சி சுவாமிகள் இருவரது படங்களும், புட்டபர்த்தி பாபா படமும் கண்ணைக் கவரும் வகையில் அமைந்துள்ளன. ஆஞ்சனேயர் தரிசனத்தில் சுசீந்திரம் ஆஞ்சனேயரை சேர்த்திருக்கலாம். தீபாவளி மலரில் கூடவா சினிமா செய்திகள்?

மின்பாறை — வெ. ஸ்யாமளா ரமணி

## அத்தியாயம் 69

# இந்திரியஜித்

கடல் ராணியின் கப்பல் தலைவன் அறையாக இருந்தது கப்பல் தலைவி அறையாக மாறியிருந்ததையும், அதில் துப்பாக்கிகள், ரவைகள், வாள்கள் இவற்றுக்குப் பதிலாக ஊதுவத்தி, சாம்பிராணி தூபக்கால் முதலிய போகப் பொருள்கள் இருந்ததையும், பஞ்சணையும் ஒன்றுக்கு இரண்டாக இருந்ததையும் அவற்றில் நறுமண மலர்கள் தூவப்பட்டிருந்ததையும் கவனித்த இந்திரஜித் சில விநாடிகள் பிரமை கொண்டான். பிறகு சீற்றம் கொண்டான். அந்தச் சீற்றத்தைப் பின்னாலிருந்த இரு பெண்களின் நகைப்பும் அதிகப்படுத்தவே சரேலெனத் திரும்பி ''இதற்கென்ன அர்த்தம்? ஏது இந்தப் பொருள்கள்?'' என்று கேட்டான் கோபம் குரலில் மிதமிஞ்சி ஒலிக்க.

கடல்ராணியும் சாருவும் ஒருவரை ஒருவர் பார்த்து லேசாக நகைத்துக் கொண்டனர். அந்த நகைப்பின் ஊடே ராணி கேட்டாள். ''சாரு! இவர் எதற்காகக் கோபிக்கிறார்?'' என்று.

''ஆண்களின் கோபத்துக்குக் காரணம் தேவையில்லை.'' என்று சொன்னாள் சாரு இதழ்களைக் கேலியாக மடித்து.

''காரணம் இருக்கிறது. காரணம் என்ன, இரண்டு காரணங்கள் இருக்கின்றன.'' என்று கூறி அவர்கள் இருவரையும் மாறி மாறிப் பார்த்தான் அனந்த்.

இருவரும் மனோகரமாக உடை அணிந்திருந்தார்கள். ராணி தனது நிறத்துக்கு ஈடாகச் சிவப்புப் பட்டுச் சேலையும் கை குறைவாகவுள்ள சிவப்பு ரவிக்கையும் அணிந்திருந்தாள். அந்த உடைகளின் நிறத்துக்குச் சரியாக அவள் வதனமும் சிவந்து கிடந்தது. உள் பஞ்சணையொன்றில் தூவப்பட்டிருந்த சிவந்த மலர்களைப் போலவே ஒரு மலரும் அவள் தலையில் சொருகப்பட்டிருந்தது. ஒரு காதில் மட்டும் ஒரே ரத்தினம் பதிக்கப் பெற்றிருந்த ஒரு தங்க வளையம் காட்சியளித்தது. அவள் இதழ்கள் காது வளையத்திலிருந்த ரத்தினத்தின் சிவந்த நீரோட்டத்தைத் தோற்கடித்திருந்தன.

சாரு அவளுக்கு நேர் எதிராக வெள்ளைப் பட்டு அணிந்து வெள்ளை மலரைத் தலையில் சூடியிருந்தாள். எதிரே இருந்த இன்னொரு பஞ்சணையில் வெள்ளை மலர்கள் தூவப்பட்டிருந்ததை அனந்த் பார்த்து அவளையும் பார்த்தான். அவள் காதிலிருந்த ஒரு வளையத்தின் வைரக் கல் அவள் முக ஜாஜ்வல்யத்தைக் கண்டு சிறிது அடங்கியிருந்தாலும் அந்த வெள்ளை வைரத்தி



கடல் ராணி

சாண்டில்யன்

லிருந்து கப்பல் பந்தங்களின் வெளிச்சம் கிளப்பிய வர்ண ஜாலங்கள் அவள் அழகிய உடலிலிருந்த வர்ண ஜாலங்களை நினைவுக்குக் கொண்டு வந்தன. வெள்ளைக்குத் தானும் ஈடுகாட்டவேண்டும் என்பதற்காக சாருநிதி இதழ்களை விரித்து மந்தகாசம் செய்து உள்ளிருந்த முத்துக்களில் இரண்டை லேசாக வெளிப்படுத்தினாள்.

இரு பெண்களும் கழுத்தில் ஒரே மாதிரியான நவரத்தின மாலையை அணிந்திருந்தார்கள். இரு பெண்களும் ஒரே மாதிரி மந்தகாசம் செய்தார்கள். அவர்கள் கண்கள் ஒரே மாதிரியாகச் சிரிப்பை உதிர்த்துக் கொண்டிருந்தன. இவற்றை யெல்லாம் பார்த்த இந்திரஜித் அனந்த் இரண்டாம் முறையாக முதல் கேள்வியின் ஒரு பகுதியைத் திருப்பி ''ஏது இந்தப் பொருள்கள்?'' என்று கேட்டான்.

''லா பூஷே கொடுத்தார்'' என்றாள் கடல் ராணி.

''கட்காரிகளிடமிருந்து வாங்கி வந்தார்'' என்றாள் சாரு.

''ஆபரணங்களை அவர் முன்பு அளித்த பெட்டியிலிருந்து நாங்களே எடுத்துக்கொண்டோம்'' என்று விளக்கினாள் ராணி.

''ஊதுவத்தியைக் கொளுத்தித் தூபக்காலில் சாம்பிராணியைப் புகைய விட்டதெல்லாம் லிவாஸியர்தான்'' என்றாள் சாரு லா பூஷேயின் மற்றொரு பெயரைக் குறிப்பிட்டு.

''வேறு வேலை இல்லையா லா பூஷேக்கு?'' என்று சீறினான் அனந்த்.

''இருக்கிறது. நீங்களே அவரை வேறு கப்பலுக்குச் சென்று போராடக் கூறியதாகச் சொன்னார். நீங்கள் வந்தவுடன் தான் புறப்பட வேண்டும் என்று இந்தப் பள்ளியறையை.... இல்லை... இந்தத் தலைவன் அறையை அவசர அவசரமாக அலங்கரித்தார்'' என்று ராணி சொன்னாள்.



அனந்த் கேட்டான். "லா பூஷேயை நான் இன்றிரவு போகச் சொல்லவில்லை அவரது கப்பலுக்கு. நாளைக் காலையில் தான் போகச் சொன்னேன். எதற்காக இப்பொழுதே ஓடினான்?" என்று.

"அவரே இதற்குக் காரணம் சொன்னார்" என்றாள் சாரு.

"என்ன காரணம்?"

"உங்களுக்கு இடைஞ்சலாக இருக்கத் தனக்கு இஷ்டமில்லை யென்று சொன்னார்."

"அவரால் என்ன இடைஞ்சல் எனக்கு?"

"அவர் எங்கு தங்குவார்? கடல் ராணியில் வசதியான அறை காப்டன் அறை ஒன்றுதான்" என்றாள் ராணி.

இதைக் கேட்டதும் அனந்த் அதிகக் கோபத்துடன் அறைக்குள் நுழைந்தான். பெண்கள் இருவரும் அவனுடன் நுழைந்து கதவைத் தாளிட்டு அனந்தை நோக்கினார்கள். விஷமம் சொட்டிய புன்முறுவல் காட்டினார்கள். அனந்த் இரு பஞ்சணைகளிலும் உட்காராமல் சாளரத்தண்டை சென்று நின்று கொண்டான். தென்றல் அவன் முதுகில் மிக இன்பமாகத் தடவியது. இரண்டு பஞ்சணைகளுக்கு அப்பால் இருந்த தட்டை எடுத்துக் கொண்டு வந்தாள் ராணி. அதிலிருந்த பழங்களை எடுத்து அனந்தை நோக்கி நீட்டினாள் சாரு. வேண்டாமென்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தான் அனந்த். அதிலிருந்த பால் குவளையைக் கொடுத்தாள். அதையும் வேண்டாமென்று தலையை ஆட்டினான். ராணி பழைய இடத்தில் தட்டை வைத்து விட்டுத் திரும்பி வந்தாள். வந்தவள் அனந்தை ஏதும் கேட்கவில்லை. செவ்வலரி தூவியிருந்த பஞ்சணையில் நன்றாக மல்லாந்து படுத்தாள். சாரு வெள்ளை மலர்ப் பஞ்சணையில் படுக்கவில்லை. "அக்கா! நான் வெளியே போகட்டுமா?" என்று வினவினாள் ராணியை நோக்கி.

"என்னைக் கேட்டால்?"

"அவரைக் கேட்கட்டுமா?" என்று சாரு வினவினாள்.

"கேள்" என்று ராணி நகைத்தாள்.

அனந்தின் உணர்ச்சிகள் பல திசைகளில் ஓடின. முகம் மட்டும் கல்லாயிருந்தது. எந்த உணர்ச்சியும் காட்டாமல். கடைசியில் அவன் வெடித்தான். "அட சனியன்களா!" என்று.

"சாரு! என்று அழைத்தாள் ராணி.

"என்ன ராணி?"

"தலைவர் நமக்குப் புதுப்பட்டம் கொடுத்திருக்கிறார்" என்றாள் ராணி.

"ஆம்"—சாரு நகைத்தாள்.

"நாம் சனியன்களாம்."

"சனி ஒருவன் தானே?"

"இருவருக்கும் அவனைப் பிரித்துக் கொடுத்திருக்கிறார்"

"அப்படியானால் இவர்தான் சனியன்."

"எப்படி?"

"இவர் தானே தன்னை இரண்டாகப் பிரித்து நமக்கு அளித்திருக்கிறார்?"

அவர்கள் இருவரும் தன்னைச் செய்த கேலியாலும், மறுநாள் வரப்போவது கடுமையான போர் என்பதாலும் சினம் தலைக்கேறிய அனந்த். பஞ்சணையில் கிடந்த ராணியைத் தூக்கி ஒரு தோளில் போட்டுக் கொண்டான். அடுத்து சாருவை தூக்கி இன்னொரு தோளில் போட்டுக் கொண்டான். "உங்கள் இருவரையும் கடலில் எறிந்து விடுகிறேன்" என்று கூவினான்.

"செய்யுங்கள்" என்றாள் ராணி, அவன் முதுகுப்புறம் தொங்கிய தலையைத்தூக்கி.

"செய்யுங்கள். இப்படியே எங்களைத் தூக்கிக் கொண்டு வெளியே சென்றால் மிக நன்றாக இருக்கும்" என்றாள் சாரு.

அப்பொழுது தனது நிலைமையை உணர்ந்த அனந்த் இருவரையும் ஒரே பஞ்சணையில் போட்டு முகப்பில் தான் உட்கார்ந்து கொண்டான். அவர்கள் இருவரையும் நோக்கினான் பல விநாடிகள். கடைசியாகச் சொன்னான் "ராணி! சாரு! நீங்கள் இருவருமே என் இதய பீடத்தில் இருக்கிறீர்கள்" என்று.

இருவருக்கும் அது புரிந்தே இருந்ததால் மௌனம் சாதித்தார்கள். அனந்தே பேசினான்: "நம் நாளை அரபிக் கடலின் சரித்திரத்தில் இதுவரை காணாத பெரும் போரைக் காணப்போகிறோம். அதன் முடிவைப்பற்றி எனக்குச் சந்தேகம் இல்லை. நிச்சயம் வெற்றி நமக்குத்தான். பிரிட்டிஷ் கப்பல்களில் குறைந்த பட்சம் ஐந்து கப்பல்களாவது நாசம் ஆகும். காஸண்ட்ரா அழிக்கப்படும் அல்லது அதன் வலு குறைக்கப்படும். அரபிக் கடலில் வெளி நாட்டவர் தலையீடு ஒழியும். நாளைக்கு நமது பலத்தையும் போர்த் தந்திரத்தையும் நமது நாட்டு எதிரிகள் உணருவார்கள். நமது பெண்களின் போராடும் திறமையையும் நமது நாட்டு எதிரிகள் உணருவார்கள். அதனால் தான் இன்று... இன்று... உங்கள்..." மேலே பேச முடியாமல் தவித்தான். அது வரையில் இருந்த உணர்ச்சி வேகம் தளர்ந்தது.

இரு பெண்களும் எழுந்து அவன் இரு புறமும் அமர்ந்து கொண்டார்கள். இருவரும் இரு புறங்களிலும் அவனை வெறியுடன் அணைத்துக் கொண்டார்கள். இரு கன்னங்களிலும் இரு முத்திரைகள் பொறிக்கப்பட்டன. அத்தனைக்கும் இந்திரஜித் இத்திரியஜித்தாகவே இருந்தான். எழுந்து வெளியே சென்றான். (தொடரும்)

பொதுவாக, மற்ற பத்திரிகைகள் போல புதிய எழுத்தாளர்களை வரவேற்பதில் கல்கி ஒருபடி பின்தங்கித்தான் இருக்கிறது. இது வருந்தத்தக்கது. 'கந்து பதில்கள்' மிகச் சிறப்பான பகுதி. கல்கியை இன்று எல்லோருமே விரும்பிப்படிக்கக் காரணம்: எல்லோரையும் கவரக்கூடிய அம்சங்கள், சினிமா செய்திகள், மற்றும் சிறப்பிதழ் வெளியீடுகள் — இவை நிறைந்தே நம்பர்! இந் நிலையே தொடரட்டும்! - வி. ராமகிருஷ்ணன்



# கடுகு கேள்விகள்!

கடுகு கேள்விகளுக்கு இந்த இதழில் சில சந்தா வாசகர்கள் பதில் தருகிறார்கள்.

✠ கே. மைதிலி, மாயூரம்

கே. மனிதன் எப்போது மிருகமாகிறான்? எப்போது தெய்வமாகிறான்?

ப: ஆணவத்தின்பால் தன்னை உயர்த்திக் கொண்ட மனிதன் தன் வாழ்க்கையில் தனது தேவைகளும் ஆசைகளும் பூர்த்தியாகவில்லையெனில், நியாய, ஞான குறைபாட்டினால் பலனின் தன்மையைப் புரிந்து கொள்ளாமல் மிருகமாகிறான்.

ஆண்டவன்பால் தன்னை உயர்த்திக் கொண்ட மனிதன் தன் வாழ்க்கையில் நியாயத்துக்கு விரோதமாய் கஷ்டங்களை அனுபவிக்க நேரிட்டாலும் சோதனையில் ஏற்பட்ட வேதனையை எதிர் நீச்சல் போட்டுச் சாதனையாக்கித் தெய்வமாகிறான்.

✠ எஸ். கோபாலகிருஷ்ணன், சென்னை-14

கே. தாங்கள் சந்தித்த முக்கிய பிரமுகர் யார்? அப்போது உங்களுக்கு ஏற்பட்ட அனுபவம்?

ப: நான் சந்தித்துள்ள மனிதர்களில் மதிப்புக்குரிய காஞ்சி பெரியவர்களுக்கு நிகராக யாரையும் குறிப்பிட முடியாது. நான் எப்போது அவரைச் சந்தித்தாலும் அவர் உடனே என்னை அடையாளம் கண்டுகொள்வார். என்னைப் பற்றியும் என் குடும்பத்தைப் பற்றியும் விசாரிப்பார். அவருடைய எளிமை, அசாதாரண ஞாபக சக்தி, சிக்கலான பிரச்னைகளையும் அவரி எளிய வார்த்தைகளில் விளக்கும் ஆற்றல், பல்வேறு காரியங்களைச் செய்ய பல பேருக்குத் தூண்டுகோலாக இருக்கும் பாங்கு, மக்களின் குறைகளைக் கேட்டு ஆறுதல் தருவதில் முடிவில்லா பொறுமை ஆகியன என்னைத் திக்குமுக்காடச் செய்துள்ளன. அவர் எதிரே சரணாகதி உணர்வுதான் எனக்கு ஏற்படுகிறது. அவரை நான் நினையாத நாள் கிடையாது.

✠ ருக்மிணி பத்மநாபன், சென்னை-18

கே. எந்தப் பழக்கத்துக்காவது அடிமையாகிய பின்பு வென்றிருக்கிறீர்களா?

ப: தித்திப்புப் பண்டங்கள் என்றால் எனக்கு ரொம்பவும் பிடிக்கும். சாப்பாடு ஆனவுடன் ஒரு சிறிதளவு வெல்லமாவது சாப்பிட்டால்தான் சாப்பிட்ட திருப்தி உண்டாகும். சர்க்கரை வியாதி வந்தது. ஒரே நாளில் காப்பி, டீயில் கூட சர்க்கரை சேர்ப்பதை நிறுத்திவிட வேண்டி வந்தது. பயன்: உடம்பு சீக்கிரமாகவே குணமடைந்து கொண்டிருக்கிறது. வாழ்க்கையில் வைராக்கியம் எவ்வளவு முக்கியம் என்பதையும் அறிந்து கொண்டேன்.




✠ டாக்டர் ஏ. வி. சேஷாத்திரி, சென்னை-61

கே. மறக்க முடியாத நபர் என்று யாரைக் கூறுவீர்கள்? ஏன்?

ப: மறக்க முடியாத நபர் நானேதான். என்னை மறந்து பழக்கமில்லை.

✠ R. மதுராம்பாள், ஒடியத்தூர்.

கே: பஸ் பயணத்தின்போது ஏற்பட்ட சுவையான அனுபவம் ஏதாவது உண்டா?

ப: சில மாதங்களுக்கு முன் வேலூரிலிருந்து சென்னைக்குப் பஸ்ஸில் பயணம் செய்தேன். காவேரிப்பாக்கம் கடந்து சற்று நேரத்தில் பஸ்ஸில் பயணம் செய்து கொண்டிருந்த நிறைமாத கர்ப்பிணிக்குத் திடீரென்று பிரசவ வலி கண்டது. என்ன செய்வதென அனைவரும் விழித்தனர். அப்போது எங்களுடன் பயணம் செய்து கொண்டிருந்த ஒரு லேடி டாக்டர் பிரசவம் பார்த்து நல்லபடி முடித்தது. பஸ் மறுபடி புறப்படும்போது லேடி டாக்டரின் பர்ஸைக் காணோம். கையெடுத்துக் கும்பிட வேண்டிய அந்த டாக்டரின் கைப் பையிலேயே கையை வைத்துவிட்டவரை நினைத்து மிகவும் மன வேதனை அடைந்தேன்.

✠ K. V. சுப்பிரமணியம், காட்டுப்பாடையூர்.

கே: சினிமாவால் நம் யுவர்களும் யுவதிகளும் கெட்டுப் போகிறார்கள் என்பதைப் பற்றி என்ன சொல்லுகிறீர்கள்?

ப: யுவர்களும் யுவதிகளும் சினிமாவால் தான் கெட்டுப் போகிறார்கள் என்றால் உலகில் நல்லவர்களே இருக்க மாட்டார்கள்! எவ்வளவோ பேர் எனக்குத் தெரிந்தவரை சினிமாவில் உள்ள சில முக்கியமான நல்ல விஷயங்களை மட்டும் வாழ்க்கையில் மேற்கொண்டுவிடுகிறார்கள். மற்றவற்றை விட்டு விடுகிறார்கள். சினிமாவினால் ஒருவர் கெடுவதும், நல்லவராவதும் அவரவர் மனநிலையைப் பொருத்ததே.

✠ மாலதி குப்புசாமி, பம்பாய்-25

கே. ஞானபீடப் பரிசு, சாகித்ய அகாதமி பரிசு, ராஜா சர் பரிசு ஆகியவைகளுக்கு யார் யாரை சிபாரிசு செய்வீர்கள்?

ப: அனைத்துப் பிராந்திய மொழி இலக்கியங்களில் மிகச் சிறந்த இலக்கியவாதிக்கு அளிக்கப்படும் ஞானபீட பரிசுக்கு கண்ணதாசன் அவர்களையும், சாகித்ய அகாடமியின் பரிசுக்கு தமிழ் சமுதாயத்தில் பெண்களின் நிலை, பிரச்னைகள் பற்றி மிக அதிகமாக எழுதிவந்திருக்கும் லக்ஷ்மி அவர்களையும் ராஜா ஸர் பரிசுக்கு சென்ட்ரல், ஜி. எச். என்று எடுத்துக்கொண்டு ஆராய்ந்து அழகாகக் கதைகள் புனைந்து வரும் பி. வி. ஆர். அவர்களையும் சிபாரிசு செய்கிறேன்.

# அணிந்த நுண்ணிடையாள்!



கண்ணன் மீது தீராக்காதல் கொண்ட கோபிகைகள் பலர். கண்ணனின் வரவுக்காகக் காத்துக் கிடந்த ஒருத்தி அவன் தன்னை நாடி வராது, இன்னொருத்தியுடன் தன் வீதி வழியே பொன்னுடையில் முக்காடிட்டுச் செல்வதைக் கண்டு மிகுந்த கோபம் கொண்டிருந்தாள். பிறகு, அவளையும் தேடி வருகிறான் கண்ணன்.

கண்ணனிடம் மிகுந்த கோபம் கொண்ட, காத்துக்கிடந்த அக்கோபிகை கண்ணனை எள்ளி நகையாடி உரைக்கின்றாள்:

"தோன்றி மறையும் மின்னலைப் போன்ற நுண்ணிய இடையுள்ள ஒருத்தியை, இருண்ட இரவு வேளையில் நானிருக்கும் வீதியின் வழியே, பொன் போன்ற ஆடையால் முக்காடிட்டு, மறைத்து அழைத்துப் போகின்றபோது நான் பார்த்துக் கொண்டுதான் நின்றேன்.

நான் கண்ட அந்தக் காரிகையை நீயும் கண்ணசைவு, கையசைவு காட்டி அழைத்துப் போனதையும் நான் பார்த்தேன். இப்போது மட்டும் அவளை விட்டு இங்கு ஏன் வந்தாய்? நம்பி! இப்போதும் அவளையே பின்தொடர்ந்து செல்" என்று கூறுகிறாள். இந்தக் கற்பனையை குலசேகர ஆழ்வார் இன்கவிதையாகச் சொல்கிறார்.

"மின்னொத்த நுண்ணிடையாளைக் கொண்டு
வீங்கு இருள்வாய் என்தன் வீதியூடே
பொன்னொத்த ஆடை குக்கூடலிட்டுப்
போகின்ற போது, நான் கண்டு நின்றேன்;
கண்ணுற்றவளை நீ கண்ணாலிட்டுக்
கை விளிக்கின்றதும் கண்டே நின்றேன்;
என்னுக்கு அவளை விட்டு இங்கு வந்தாய்?
இன்னம் அங்கே நட, நம்பி! நீயே".

—கன்னியர் ஊடிக் கண்ணனை என்குதல்.
பெருமான்திருமொழி— 6.
ஸ்ரீதிவ்யப்ரபந்தம்—முதலாயிரம்.

நமது லக்ஷ்மி மில்ஸ் ஸ்தாபனம் காலம் காலமாக வந்த இந்தியப் பண்பாட்டைப் பின்பற்றுகிறது. நேர்மையே இந்த ஸ்தாபனத்தின் அடிப்படை. "செய்யும் தொழிலே தெய்வம்; அதில் நேர்மையே எங்கள் செல்வம்" என்ற குறிக்கோளுடன் செயல்பட்டு மக்களுக்குச் சேவை புரிவதையே தலையாய கடமையாகக் கொண்டுள்ளது நமது லக்ஷ்மி மில்ஸ் ஸ்தாபனம்.



**லக்ஷ்மி மில்ஸ்**
**கம்பெனி லிமிடெட்**
**கோயம்புத்தூர்**



# அம்மாவைத் தேடி

அசோகமித்திரன்

எழுத்தாளர் அசோகமித்திரனுக்குச் சவால் விட்டவர்:
என். பாலு, பி.ஏ.,
பி-64, நான்காவது கிராஸ்,
தில்லை நகர், திருச்சி-620018.
கதையில் வரவேண்டும் என்று வாசகர் குறிப்பிட்டவை:
காசி நகரம், கங்கை ஆறு, படகு, ஆஞ்சநேயர் கட்டம் (ஹனுமான் கட்)
ப்ரீதா, மிஸ் ரமணி, ராஜேஷ்.

பத்தடி நடந்தால் இரண்டு படி இறங்க வேண்டும். இன்னும் எட்டடி நடந்தால் மூன்று படி ஏற வேண்டும். இந்தக் காசி நகரத்துத் தெருக்களில் வண்டிகள் போக முடியாது. வண்டிகளுக்கும் மடக்கி நீட்டக் கூடிய கால்கள் இருக்க வேண்டும். அல்லது வண்டி ஏறாமல் எல்லாரும் நடந்தேயாக வேண்டும்.

கால் நன்றாக இருந்தால்தான் காசி வாசம் சாத்தியம். காசியில் உயிரை விட வேண்டும் என்று வந்து சேருபவர்கள் கூடக் காலைப் பத்திரமாக வைத்துக் கொள்ள வேண்டும்.

காலைப் பத்திரமாக ஊன்றி வைத்துக் கொண்டு கேதார் கட்டத்துப் படிகளை ஏறி வந்தான் சந்திரசேகரன். அவன் தங்கியிருந்த விசுவநாத சாஸ்திரிகள் வீடு ஹனுமான் கட்டத்திலேதான் இருந்தது. ஆனால் அங்கு படித்துறை ஏனோ மனதுக்குப் பிடிக்கவில்லை. ஐந்து நிமிடம் நடந்தால் கேதார் கட்டம். கேதார் கட்டத்தில் விசாலமான படிகள், விசாலமான மண்டபம், விசாலமான கேதீசுவரர் கோயில். கங்கையும் அவ்வளவு சேறாக இல்லை. எந்த நேரத்திலும் ஆண்களைவிடப் பெண்களே அதிகம் தென்பட்டார்கள். குளித்தார்கள். புடவை துணி [illegible]த்தார்கள்.

படிகளில் பெரிய குடை விரித்து உட்கார்ந்திருக்கும் புரோகிதர்களிடம் சென்று தங்கள் சார்பில் வைதிகக் கிரியைகள் செய்ய வைத்தார்கள். அநேகமாக அதெல்லாமே இறந்தவர்களைக் குறித்து. சந்திரசேகரன் கூடக் காசிக்கு வந்து சேர்ந்த அடுத்த நாளே இரு புரோகிதர்களுடன் ஒரு படகை அமர்த்திக் கொண்டு அஸி, தசாஸ்வமேதம், வருணை, பஞ்சகங்கை, மணிகர்ணிகா கட்டங்களில் தலை முழுக்கும் இரணிய சிரார்த்தமும் செய்தாகி விட்டது. அப்பா, தாத்தா, கொள்ளுத் தாத்தா அம்மா, பாட்டி, கொள்ளுப் பாட்டி பெயர்களைத் திரும்பத் திரும்பச் சொல்லி, எள்ளும், தண்ணீரும் விட்டாயிற்று. அன்று எல்லாம் முடித்து வீடு திரும்ப இரண்டு மணியாயிற்று. அதுவரை சோறு தண்ணீர் கிடையாது. அந்த இரு புரோகிதர்களில் சிறிது தடிமனாக இருந்தவர் மட்டும் ஒரு முறை எலுமிச்சம் பழத்தைப் பிழிந்து ஒரு செம்பு தண்ணீருடன் கலந்து குடித்தார். காசிக்கு வந்ததற்கு மூதாதையர்களை நினைவு படுத்திக்கொண்டாயிற்று. அதன் பிறகு ஒரு வாரமாக இந்தக் கேதார் கட்டத்தில்தான் ஸ்நானம்.

பார்க்காத மூதாதையர்களை எப்படி நினைவு படுத்திக் கொள்வது? அம்மாவே ஒரு மங்கலான நிழல் போலத்தான் மனத்தில் தோன்றுகிறாள். இவ்வளவு ஸ்நானமும் எள்ளும் தண்ணீரும் அவள் வரையில்தான் சிறிதாவது அர்த்தம் பொருந்தியதாகும். அப்பா அம்மா உள்ளவர்கள் இந்த ஊருக்கு வந்தால் அவர்களும் எள்ளும் தண்ணீரும் வாரி இறைக்க வேண்டுமா? ஒருவேளை அவர்கள் காசிக்கு வரவே மாட்டார்களோ? பாரதியார் கூட அம்மா அப்பா இருவரும் செத்த பிறகுதான் காசிக்கு வந்திருக்கிறார்.

சந்திர சேகரன் ஈரத் துணியுடன் கேதா ரீசுவரரை வலம் வந்தான். பொதுவாக ஈரத் துணியுடன் சுப காரியங்கள் செய்ய மாட்டார்கள். ஆனால் ஆற்றங்கரைக் கோயில் செல்ல மட்டும் ஒரு விதிவிலக்கு.

சந்திரசேகரனுக்கு முன்னால் வெள்ளை உடையணிந்த மாது ஒருத்தி சிவலிங்கத்தின் மீது கிண்டியில் கொண்டு வந்திருந்த கங்கா நீரை ஊற்றினாள். அவளே கையால் லிங் கத்தை வழித்துத் துடைத்தாள். புடவை முந்தானையில் கொண்டு வந்திருந்த ஒரு தாமரைப் புஷ்பத்தை லிங்கத்தின் மீது வைத்தாள்.

நான்கு நாட்களுக்குள் மூன்று முறை சந்திரசேகரன் அந்த அம்மாளைப் பார்த்தும் விட்டான். ஒரு சுருக்கமும் விழாத மிகவும் அழகான முகம். அமைதியாகத் தோற்ற மளித்த அந்தக் கண்களைக் கொஞ்சம் கூர்ந்து கவனித்தால் நெடுநாள் சோகம் இழைந் தோடுவது தெரியும். அவள் எந்த வயதில் எந்தச் சந்தர்ப்பச் சூழ்நிலையில் விதவையா னாளோ?

அவனுடைய அம்மா விதவையானபோது கூட இந்த வயதுதான் இருக்கும். ஆனால் அவள் அதிக நாட்கள் அந்தக் கோலத்தைப் பூணவில்லை. போய்விட்டாள். ஆனால் யாருக்கும் நினைத்த மாத்திரத்தில் சாவு வந்துவிடுவதில்லை. அப்படியானால் காசியில் வந்து சாக வேண்டும் என்று குவிந்திருக்கும் விதவைகளின் எண்ணிக்கை இவ்வளவு அதிக மாக இருக்காது. இந்த அம்மாள் ஆரம்ப முதலே காசியைச் சேர்ந்தவளாக இருக் கலாம். எப்போதும் சாவை நினைவுபடுத் தும் இந்த ஊரில் பிறந்தவளாகவும் இருக் கக்கூடும். சிறு வயதில் கல்யாணமாகி, சிறு வயதில் கணவனை இழந்து. ஆயுள் பூராவும் கணவனின் சாவை ஒருபோதும் நினைவி லிருந்து நழுவ விடாமல் இருத்தி வைத்துக் கொண்டு வாழ வேண்டும். ஆண்களை விடப் பெண்களுக்கு ஆயுள் அதிகம். அதனால்தான் ஜனத் தொகையில் எப்பொழுதும் பெண்கள் எண்ணிக்கை சிறிது கூடுதல். அதனால்தான் விதவைகளின் எண்ணிக்கையும் சிறிது கூடுத லாகவே இருக்கிறது. அதனால்தான் ஓர் ஆணுக்குப் பல பெண்கள் போட்டியிடுகின் றனர். எல்லாரும் ராமச்சந்திர மூர்த்தியாக இருந்துவிடுகிறார்களா? இராமர் இந்த நகரத்துக்குவந்ததாகத் தெரியவில்லை. ஆனால் அவருடைய முன்னோரில் ஒருவனான அரிச் சந்திரன் இங்கே வாழ்ந்திருக்கிறான். இதே கங்கைக் கரையில் இந்தக் கேதார் கட்டத் திலிருந்து அரை மைல் தூரத்தில் வாசம் புரிந்திருக்கிறான். எப்படி? பிணங்களை எரித்து. அந்தச் சாம்பல் கூட இன்னும் கூட அங்கு கிடைக்கக் கூடும்.

அரிச்சந்திரன் பிணமெரித்துச் சத்தியம் காத்த நகரில் சந்திரசேகரன் வந்தடைந்த இரண்டு நாட்களுக்குள் ஓர் அனுபவம். மா ஆனந்த மாயியின் ஆசிரமத்தைத் தேடிச் சென்றான். 'இன்னும் போ. இன்னும் போ.' கடைசியில் அந்த இடத்தை அடைந்தபோது மா அங்கில்லை. கல்கத்தா சென்றிருந்தாள். அடுத்த மாதம் திரும்புவாள். இந்தியா சுதந்திரமடையாமலிருந்திருந்தால் ஒருவேளை அவள் டாக்கா சென்றிருக்கக் கூடும். அதுவே அவள் ஜன்ம பூமி. அரசியல், ஆன்மீக வாழ்க் கையிலும் குறுக்கிடுகிறது.

அங்கிருந்து விசுவநாத சாஸ்திரிகள் வீட் டுக்கு வரும்போது ஒரு சந்து. ஒரு சந் தென்ன, வழியெல்லாம் சந்துகள். நான் கடிக்கு ஒரு முறை படிகள் அமைந்த சந்துகள். இரு புறமும் ஆழமான திறந்த சாக்கடை.. அதனால் எந்த வீட்டுக்குள் நுழைவதானாலும் ஒரு சிறு பாலத்தைக் கடக்கிற உணர்வு ஏற்படும். வீடுகள் வெவ் வேறு உயரத்தில். சிலவற்றுக்குத் தெருவி லிருந்து ஏழெட்டுப் படிகள் ஏற வேண்டும். அப்படியொரு வீடு மடக்கடை மாதிரி இருந் தது. சந்திரசேகரன் தயக்கத்துடன் அங்கு ஏறிச் சென்றான். பத்தடி சதுர இடத்தில் வீடு, மடக்கடை இரண்டும். சாப்பிட வந்த வர் உட்காருவதற்குக் காசியளவு பழைமை தெரியும் ஒரு சிறிய பெஞ்சு. ஏழைமையில் தோய்ந்த அந்தக் குடும்பமே சந்திரசேகர னுக்கு மட தயாரிப்பதில் முனைந்தது.

அப்போது இன்னொருவனும் அங்கு வந்து உட்கார்ந்து கொண்டான். அவனுக்கும் மட. அவன் உள்ளூர்க்காரன்தான்.



''பெனாரஸ் ஹிந்து யுனிவர்ஸிடி எங்கே இருக்கிறது?'' என்று சந்திரசேகரன் அவ விடம் கேட்டான்.

''அது இப்போது மூடியிருக்கிறதே? இன் னும் பதினைந்து இருபது நாட்கள் ஆகும் அதைத் திறப்பதற்கு. நீ அங்கு சேரப் போகிறாயா?''

''இல்லை. இன்னும் ஒரு வாரம்தான் இங்கு இருக்கப் போகிறேன்.''

''அப்போது வெறும் கட்டிடங்களைத்தான் பார்க்க முடியும்.''

''அதைப் பார்த்தால் போதும்.'' சந்திர சேகரனுக்கு அங்கு வேறு யார் இருக்கி றார்கள் பார்ப்பதற்கு?

தடிமனான கண்ணாடித் தம்ளரில் இரு வருக்கும் டீ கொணர்ந்து கொடுக்கப்பட் டது. உள்ளூர்க்காரன் அரை ரூபாயை எடுத்துக் கொடுத்தான்.

''நான் கொடுத்தால் தவறில்லையே?''

''தவறு என்றில்லை. ஆனால் நீங்கள் எதற் காக நஷ்டப்பட வேண்டும்?''

''நாலணாவில் என்ன பெரிய நஷ்டம்? ஆனால் காசிக்கு வருபவர்கள் வேறு யாரை யும் செலவழிக்க விட மாட்டார்கள். காசிக்கு வந்த புண்ணியம் போய்விடும்!''

''நிஜமாகவா?''

''நீ புண்ணியம் தேடி வந்திருக்கிறாயா?''

''இல்லை.''

''அப்போது பாவம் — பாவத்திற்கும் ஏற்ற இடம் இது.''

சந்திரசேகரனுக்கு எப்போதோ வாசித்த பிரேம்சந்த் நாவல் ஞாபகத்துக்கு வந்தது. ''டால் மண்டி'' என்றான்.

''டால் மண்டி எதற்கு? வேறு சொர்க்க மான இடங்கள் இருக்கின்றன.''

''உன் பெயர் என்ன?''

''என்னைப் பார்த்தால் எப்படி இருக்கு?''

''எனக்குச் சொல்லத் தெரியவில்லை.''

''ராஜேஷ் கன்னா மாதிரி இல்லை? என் பெயரும் அதுதான்.''

''நீ கன்னாவாக இருக்க முடியாது.''

''மாத்தூர், சின்ஹா, ராய் குப்தா எது வாக இருந்தால் என்ன? நான் உன் சகோ தரியைக் கட்டிக் கொள்ளப் போவதில்லை.'' உனக்கு என் பெண்ணைத் தரப்போவதில்லை.''

அந்தச் சோகக் கண்களுடைய அம்மாள் கேதார் கட்டத்திலிருந்து வெளியேறி மேற்கு திசையில் செல்லத் தொடங்கினாள். அவள் தெருவில் போகும்போது அவள் உயரம் குறைந்து உருவம் குன்றி விட்ட மாதிரி இருந்தது. எவ்வளவோ ஆண்டுகளாக அவள் கங்கையில் குளித்துவிட்டு அந்தத் தெரு வழியாகத்தான் வீடு திரும்பி யிருப்பாள். அவளுக்குக் குழந்தைகள் இருக்குமோ? பிள்ளை பெண்கள் இருப்பார்களோ? ஏனோ அவள் எல்லோரும் போலத் தாயாகி யிருப்பாள் என்று தோன்றவில்லை. அவன் பார்க்க வந்த மா ஆனந்த மாயிக்கும் குழந்தைகள் கிடையாது. ஆனால் அவள் உலகுக்கெல்லாம் தாய் என்றுதான் கூறுகிறார்கள். அப்புறம் இதே காசிக்கு சாரதா மணியும் வந்திருக் கிறாள். பகவான் ராமகிருஷ்ணர் மறைந்த பின் எவ்வளவோ இந்தியப் பெண்கள் போல விதவையாக முப்பத்தைந்து ஆண்டுகள் ஜீவித்திருக்கிறாள். அவளுக்கும் குழந்தை கிடையாது. ஆனால் அவளுக்கும் உலகிலுள்ளோர் எல்லோரும் குழந்தைகள்.

சந்திரசேகரன் அந்த அம்மாளைச் சிறிது தூரம் பின்தொடர்ந்தான். ஆனால் அவள் ஒரு சந்தில் திரும்பியதும் இவன் அதே சந்தை அடைவதற்குள் அவள் எங்கோ காணாமல் போயிருந்தாள். ஆனால் அவசியம் மறு நாள் அவள் ஸ்நானத்துக்கு வருவாள். சந்திரசேகரன் அவளைப் பார்க்க இன்னும் ஒரு சந்தர்ப்பம் உண்டு.

சந்திரசேகரன் மீண்டும் கேதார் கட் டத்துக்குச் சென்று கங்கையில் இறங்கினான். அவனுக்குக் குளித்துக் கொண்டே இருக்க வேண்டும் போலிருந்தது. எவ்வளவு குளித் தும் திருப்தி ஏற்படவில்லை. அழுக்குப் போக வில்லை. மாறாக அழுக்கு அதிகமாயிருந்தது. உண்மையோ பொய்யோ இறந்து போன மூதாதையர்களுக்குக் காசியில் கருமம் செய்ய எல்லாருக்கும் எளிதில் வாய்ப்பு கிடைத்து விடுவதில்லை. ஆனந்தமாயியிடம் கதறி அழுதால் தீராத துக்கமெல்லாம் தீர்ந்துவிடும் என்று சொன்னார்கள். அவ ளுடைய பெயரே ஆனந்தமான அம்மா. அவனுக்கு நிஜமான அம்மா ஏதோ நிழல் தான். ஆனால் பெற்றால்தான் அம்மா என்றில்லை. இந்தக் கங்கையே ஆயிரம் ஆயிரமாண்டுகளாக உலக மக்கள் எல் லோருக்கும் தாயல்லவா? இந்த அம்மா வைத் தேடி வந்தபோது இப்படியொரு சம்பவம் விளைவது சாபம் என்று கூறுவதா, தலையெழுத்து என்று கூறுவதா? அல்லது பலவீனமா?

அன்று ராஜேஷ் காசியில் சொர்க்கமான இடங்கள் இருக்கிறதென்று மட்டும் சொல்ல வில்லை. ''வருகிறாயா?'' என்றும் கேட் டான். அழைத்தும் சென்றான். அந்தப் பெண் தன் பெயர் பரீதா என்றாள். அந்த சுக்கடையில் காணக்கிடைத்த ஏழ்மை அங் கும் மிகவும் பிரியப்பட்டு வாசம் செய்து கொண்டிருந்தது. அவளுக்கும் கண்களில் ஒரு தீராத சோகம். அவளும் விதவையோ? அவளுக்கு ஒரு குழந்தை இருந்தது. அந் னிடம் ராஜேஷ், ''மிஸ் ரமணி'' என்று கொஞ்சினான். இன்னும் சரியாகப் பேசக் வராத குழந்தையை அவன் 'மிஸ்' என்று சொல்லிக் கூப்பிட்டது குரூரமாக இருந்தது!

---




| | | |
|---|---|---|
| 1. | தலையங்கம்: | 60% |
| 2. | கார்ட்டூன்: | 50% |
| 3. | கருத்து பதில்கள்: | 40% |
| 4. | தொடர்கதைகள்: | 40% |
| 5. | சிறுகதைகள்: | 45% |
| 6. | சினிமாவிமர்சனம்: | 30% |
| 7. | சிறப்பிதழ்கள் & கடைசிப்பக்கம்: (சோனவாக) | 25% |

அர். வி. ரமணன், சென்னை 102

# பாரம் இறங்கியது

## ஜோதிர்லதா கிரிஜா

எழுத்தாளர் ஜோதிர்லதா கிரிஜாவுக்குச் சவால் விட்ட வாசகர் :

ரவிராஜ்
25F, நாகலக்ஷ்மி மரக்கறிக் கடை,
கோவலன் நகர், மதுரை-625003

கதையில் வேண்டுமென்று குறிப்பிட்ட பொருள்கள், பெயர்கள் :

பல நெகடிவ் போட்டோ ஒட்டப்பட்ட ஓர் ஆல்பம், பலவகைக் கையெழுத்தில் எழுதப்பட்ட டயரி, தூக்க மாத்திரைகள், காண்டாக்ட் லென்ஸ். பிரேமா, கல்யாணி, ராம்ஜி

கராத்தே பயிற்சிப் பள்ளியிலிருந்து பிரேமா வெளிவந்தபோது நன்றாக இருட்டத் தொடங்கிவிட்டிருந்தது. வெளியே நின்று கொண்டிருந்த ஒருவன் — வெளிப் பார்வைக்கு ஒரு பொறுக்கி போல் தோன்றியவன் — அவளை வியப்பாகப் பார்த்ததோடு நில்லாமல், தனது பின்னேக்கான நகர்தலில் அந்த வியப்பை வெளிப்படையாகவே காட்டிக் கொண்டான்.

'பெண்கள் கராத்தே கற்றுக் கொள்ள வேண்டிய காலம் வந்துகொண்டிருக்கிறது... இதே ஆசாமி நான் கராத்தே கற்றுக்கொள்பவள் என்பது தெரியாதவனாக இருந்தால் என்னைச் சீண்டிப் பார்ப்பான். — இப்படி நினைத்து மனத்துள் சிரித்தவாறு அவள் விரைவாக நடந்தாள். அவள் கண்கள் தன் வழியில் எதிர்ப்பட்ட ஸ்கூட்டர்களின் இலக்கங்களை யெல்லாம் வழக்கம் போல் கண்காணித்தன. தெருவில் எதிர்ப்படுகிற ஸ்கூட்டர்களின் இலக்கங்களை யெல்லாம் கவனிப்பதும் 0722வைத் தேடுவதும் தனது இயல்பாகவே ஆகிப்போனதை எண்ணி அவள் கசப்புடன் சிரித்துக் கொண்டாள்.

'கல்யாணி! நீ செத்துப்போய்ச் சரியாக ஒரு வருஷம் ஆவதற்கு இன்னும் ஒரு வாரமே இருக்கிறது. இன்னும் நான் அவனைக் கண்டுபிடிக்கவில்லை. எப்படியாவது முயன்று இன்னும் ஒரு வாரத்தில் நான் அவனைக் கண்டு பிடித்தே ஆகவேண்டும்.. எப்படியாவது!....'

கல்யாணியைக் கடைசியாகப் பார்த்த கோலம் அவளது நினைவில் தோன்றி அவளது வயிற்றைக் கலக்கியது. பாதிக் கடிதம் எழுதிக் கொண்டிருக்கையிலேயே தலை சாய்ந்து இறந்துபோன கல்யாணியின் சரிந்த தோற்றம் அடிக்கடி அவளுக்கு ஞாபகம் வருவதுண்டுதான்.

அவள் கண்களில் ஈரம் வரியிட்டது. 22ம் இலக்கமுள்ள பேருந்து வழியும் பயணிகளுடன் வந்து நின்றது. சிலர் மட்டும் இறங்கினார்கள். முண்டியடித்து ஏறிவிட முடியுமானாலும் ஆண்களிடையே சிக்கி நசுங்க அவள் விரும்பாமல் அடுத்த பேருந்துக்கு நின்றுவிட்டாள். அப்போது தான் அந்த ஸ்கூட்டர் அவள் கண்களில் தென்பட்டது. பேருந்து நிறுத்தத்துக்கு மிக அருகில் இருந்த பெட்ரோல் பங்குக்குள் புகுந்தது. துணிச்சலும் வலிமையும் நிறைந்த பெண்ணானாலும்' அவளது இதயம் இரைந்து தான் துடித்தது. அவள் அவசர நடையில் பெட்ரோல் பங்கை நெருங்கி அவனைக் கவனித்தாள்.

அக்கம் பக்கத்தவர்களைப் பற்றிய விழிப்புடன் அவள் அவனை அடிக்கடி ஜாடையாகப் பார்த்தாள். அவனது அழகு, கம்பீரம், நடையுடை பாவனைகள், கவர்ச்சி ஆகியவற்றை யெல்லாம் கடந்து அவள் மனத்தில் அதிகமான வெறுப்பே அவன்பால் ஏற்பட்டது. தன் அக்காவின் சாவுக்குக் காரணமானவன் என்பதால் மட்டும் தான் அந்த வெறுப்பா?

காசைக் கொடுத்துவிட்டுச் சர்ரென்று வெளியே வந்தபோது அவனை உரசுகிற நெருக்கத்தில் அவள் பார்த்தாள். அவனும் அவளைப் பார்த்தான். ஒரு புன்சிரிப்புடன் பார்த்தான். கல்யாணியின் தங்கை நான் என்பது அவனுக்குத் தெரியாது. 'நல்லவேளை. எனக்கும் அவனுக்கும் தோற்றத்தில் சம்பந்தமே இல்லை!' என்று நினைத்துக்கொண்டாள்.

அவளைக் கடந்தபோது ஸ்கூட்டரைச் சரித்தபடி, ''வாண்ட் ஏ லிஃப்ட்?'' என்று அவன் கேட்டான்.



தனது பார்வை அவனைத் தாக்கிவிட்டதைப் புரிந்து கொண்ட நிலையிலும் அவன் இந்த அளவுக்குப் போவான் என்பதை எதிர்பார்க்காத அதிர்ச்சியில் சற்றுத் திகைத்து, ''ஆமாம். ஆனால் உங்கள் வீடு எங்கே?'' என்று அவள் கேட்டாள்.

''என் வீடு அடையாறில் இருக்கிறது.''

''அடையாறில் எங்கே?''

''ஆறாவது மெயின் ரோட்.''

''நான் திருவல்லிக்கேணிக்கல்லவா போக வேண்டும்? பஸ்ஸில் போய்க் கொள்கிறேன்.''

''நான் இருக்கும் தெருவைக் கூடக்கேட்டீர்களே? நீங்களும் அடையாறில்தான் இருக்கிறீர்கள் என்றல்லவா நினைத்தேன்?''

அவள் வெட்கப்பட்டு விட்டவள் போல் நடித்து, ''சும்மா தெரிந்துகொள்ளுவதற்காகக் கேட்டேன்....'' என்றாள்.

''திருவல்லிக்கேணியில் உங்களை ட்ராப் பண்ணிவிட்டு அடையாறு போகிறேனே?''

''பரவாயில்லை. அதோ ஒரு பஸ் வருகிறது...மே ஐ நோ யுவர் குட் நேம் ப்ளீஸ்?''

''ராம்ஜி..... யுவர் குட் நேம்?''

''ஐ'ம் ப்ரேமா!''

''லவ்லி நேம்! வருகிற ஞாயிற்றுக் கிழமையன்று என் வீட்டுக்கு வாருங்களேன்.''

''ஓ எஸ், வருகிறேன்... ஈவினிங் எனக்குக் கராத்தே கிளாஸ் இருக்கிறது. நான் வருகிற ஞாயிற்றுக் கிழமை காலை உங்களைச் சந்திக்கிறேன். அதோ என் பஸ் வந்துவிட்டது!''

அவன் புன்சிரிப்போடு நின்று, அவள் பேருந்தில் ஏறி அமர்ந்தவரையில் பார்த்துவிட்டுக் கையாட்டிப் புறப்பட்டான்.

**க**ல்யாணிக்கும் அவளுக்கும் ஒரே மாதத்தில் முன் பின்னாக வேலை கிடைத்தது. கிராமத்தில் பெற்றோர்களை விட்டு விட்டு இருவரும் சென்னைக்கு வந்து தெரிந்தவர்கள் ஒருவரின் உதவியால் திருவல்லிக்கேணியில் இருந்த ஒரு பெரிய வீட்டின் ஒரு பகுதியை வாடகைக்குப் பெற்று வசிக்கத் தொடங்கினார்கள். கொஞ்ச நாட்களுக்குப் பிறகு பெற்றோரை வரவழைப்பது என்பது திட்டம். அதற்குள் இப்படியெல்லாம் நடந்துவிட்டது.

காப்பியைக் குடித்துவிட்டு, பிரேமா கல்யாணியின் இறுதிக் கடிதத்தை எடுத்துப் படிக்கலானாள்.

அன்புள்ள பிரேமா,

இந்தக் கடிதம் உனக்குப் பேரதிர்ச்சியையும் துயரத்தையும் அளிக்கும் என்பதை நான் அறிவேன். ராம்ஜி என்னும் இளைஞரால் நான் ஏமாற்றப்பட்டு விட்டேன்.

நான் அழுகையும் புலம்பலுமாக உடனே என்னைத் திருமணம் செய்து கொள்ளுமாறு கெஞ்சியபோது, 'நானே விரும்பினாலும் நீ என்னை மணந்து கொள்ள முன்வர மாட்டாய் — என்னைப் பற்றிய உண்மைகள் தெரிந்தால்!' என்று சொல்லிவிட்டு அவர் என்னிடம் சில நெகட்டிவ்கள் ஒட்டப்பட்டிருந்த ஆல்பத்தைக் காட்டினார். அதில், என்னுடன் அவர் எடுத்துக் கொண்டிருந்த புகைப்படத்தின் நெகட்டிவுடன் வேறு சில பெண்களுடன் சேர்ந்து எடுத்துக் கொண்டிருந்த புகைப்படங்களின் நெகட்டிவ்களும் இருந்தன. என்னுடன் சேர்ந்து எடுத்துக்கொண்டிருந்த புகைப்படத்தின் நகலை அவர் தாமே வைத்துக் கொண்டிருந்ததுடன் அதன் நெகடிவ்வையும் ஸ்டுடியோவிலிருந்து பெற்றுக் கொண்டிருந்தது அவர் எவ்வளவு பெரிய சாமர்த்தியசாலி என்பதை எனக்கு உணர்த்தின. அந்த நேரம் என் வாழ்க்கையின் மிகவும் அதிர்ச்சியான நேரம். இது போல் பல பெண்களுடன் அசிங்கமாகத் தொடர்பு கொண்டுள்ள ஒருவனை மணந்து வாழ எந்தப் பெண்தான் இசைவாள்?

அவர் தம் டயரியில், நான் அவரைச் சந்தித்த ஞாயிற்றுக்கிழமைகளில், 'இன்றுபோல் என்றும் இருப்போம்...இன்று என் வாழ்க்கையில் ஒரு மகிழ்ச்சியான நாள்' போன்ற வாசகங்களை என்னையே எழுதச் செய்ததுண்டு. அது போன்று அந்த டயரியில், வேறு சில ஞாயிற்றுக் கிழமைகளில், வேறு சில பெண்கள் எழுதிக் கையெழுத்திட்டிருந்த பக்கங்களை அவரோடு நான் சண்டை போட்ட அன்று அவர் காட்டி எனது அதிர்ச்சியையும் ஏமாற்றத்தையும் இரு மடங்காக்கினார். என்னதான் என்னை அவர் மோசம் செய்திருந்தாலும் இப்படிப்பட்ட ஒருவருடன் வாழ்வைப் பிணைத்துக்கொள்ள எந்தப் பெண் தான் விரும்புவாள்? இது போல் அவர் எத்தனை பெண்களின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டிருப்பார் என்பதை நினைத்துப் பார்த்தபொழுது அருவருப்பும் ஆத்திரமுமே மனத்தில் எஞ்சி நின்றன. என் காதல் செத்துப்போயிற்று. அவமானமும் ஆத்திரமும் கொண்ட, கைவிடப்பட்ட எந்தப் பெண்ணும் செய்கிற காரியத்தையே நானும் செய்வதென்று முடிவு செய்தேன். அதற்குத் தூக்க மாத்திரைகள் எனக்கு உதவின.

அவர் தனியாக ஒரு வீட்டில் வசிப்பவர். அவருடைய ஸ்கூட்டர் நம்பர் டி.எல்.டி. 0722. அவரது விலாசம் ....நம்பர் பதினெட்டு....'

---

**எரிச்சலூட்டக் கூடிய விஷயம்:**

'ஜெயிக்கும் குதிரை எது?' என்று கேட்கும் கேள்விப் போட்டிகள் (ரேஸ் கோர்ஸ் சாலையில் இருப்பதால் வந்த வினையோ?) சினிமா செய்திகள் சமீபகாலமாக அளவுக்கதிகமாக நுழைந்திருப்பது, நட்சத்திர முகங்களை வெட்டி ஒட்டும் போட்டி - இவையே.

பிடித்த பகுதிகள்: நகைச்சுவை ரசனையோடு அளிக்கப்படும் 'கடுகு' பதில்கள், சிரிக்க வைக்கும் அரட்டை ஜோக்குகள், விஷயமுள்ள துணுக்குகள். சாண்டில்யனின் சரித்திரத் தொடர் கதை ஒரு ப்ளஸ் பாயிண்ட்:

பாராட்டக்கூடிய விஷயம்: மாறுதல் பல இருந்தாலும், ஆன்மீகச் செய்திகளையும், தவறாமல் நல்ல விஷயங்களையும் ஒருங்கே வெளியிட்டுக் கொண்டு வருவது.

- வி. ஸ்ரீதர், சென்னை-15



| | | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| க | ளி | வ | ணி | ன் | கா | த | லி | ■ | ■ | ■ | ■ | ச | யா | வ | ள | ம் |
| ரை | ■ | ன் | ■ | ■ | த | ■ | ■ | ■ | ■ | ■ | ■ | ■ | கு | ■ | ■ | ள |
| நீ | ■ | டா | ■ | ■ | லை | ■ | து | ப் | ப | றி | யு | ம் | சா | ம் | பு | ம |
| த | ■ | ர் | ■ | ■ | மை | ■ | ■ | ■ | ■ | ■ | ■ | ■ | லை | ■ | ■ | ன் |
| நீ | ■ | கு | ■ | ■ | ம் | யு | சீ | ப | ம் | சா | த் | ப் | ■ | ■ | ■ | பெ |
| ழ | ■ | ழ | ■ | ■ | தீ | வு | க | ள் | ■ | ஜெ | ய | கா | ந் | த | ன் | ■ |
| ல் | ■ | லி | ■ | ■ | வி | ந் | த | ன் | ■ | க | ன் | னோ | கா | வி | ய | மொ |
| க | ■ | ■ | ■ | ■ | ள் | ■ | நீ | ந | ச் | சி | ற் | ற | ம் | ப | ல | ம் |
| ள் | ■ | ■ | ■ | ■ | லை | ■ | ■ | ■ | ■ | ற் | ■ | ■ | ■ | ■ | ■ | ■ |
| ■ | ■ | ■ | ■ | ■ | ■ | ■ | ம | ■ | ந | பி | ச் | சு | மீ | ர் | த் | நீ |
| பா | லை | வ | ன | க் | கு | ■ | து | ■ | ■ | ய | வ | ன | ரா | ணி | ■ | ■ |
| ■ | ர | ■ | ■ | ■ | ■ | ■ | ர | ■ | ■ | ன் | ■ | ■ | ■ | ■ | ■ | ■ |
| ■ | ங் | வி | ல | கு | கை | ■ | நா | ய | க் | க | ர் | ம | க் | க | ள் | ■ |
| மொ | க | மு | ன் | ■ | ■ | ■ | ய | ■ | வெ | ள் | ளை | கா | க் | கை | க | ள் |
| ■ | ள | ■ | ■ | கு | ஜா | ன | கி | ரா | ம | ன் | ■ | ■ | ■ | சு | ஜா | தா |

—கடிதம் முடிந்து விட்டது. கல்யாணியின் தலை அதற்குள் சாய்ந்து விட்டது காரணமாக இருக்க வேண்டும்.

பிரேமா பெருமூச்சுடன் எழுந்து கடிதத்தைப் பெட்டிக்குள் வைத்துவிட்டு அலமாரியிலிருந்து கல்யாணி உபயோகித்த தூக்க மாத்திரைப்பாட்டிலை எடுத்துப் பார்த்தாள். முத்து முத்தான மாத்திரைகள் இன்னும் பத்துப் பதினைந்து மீதமிருந்தன. 'டேய், ராம்ஜி! உன்னைக் கொல்ல மாட்டேன். ஆனால் இதே தூக்க மாத்திரைகளைக் கொண்டு உன்னை நடைப் பிணமாக்குவேன்! நான் கராத்தே கற்பதேஅதற்குத் தானடா!'

**ரா**ம்ஜியை அவள் தாளுகவே வலுவில் சென்று மறு ஞாயிற்றுக் கிழமை சந்தித்தாள். அவள் போனபோது அவன் கண் வலியால் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்தான். தனி வீட்டில் தனியாக இருந்தான்.

''கமின், மை டியர் கராத்தே கர்ள்!''

''என்ன செய்வது, மிஸ்டர் ராம்ஜி! இப்போது கூட வரும் வழியில் ஒரு ராஸ்கல் என் மீது மோதிக் கொண்டே போனான். திரும்பிக் காலால் ஒரு உதை விட்டேன். விழுந்து கிடக்கிறான். எழுந்து நடக்க ரொம்ப நேரம் ஆகும்....'' என்றபடி அவன் பின் நடந்தாள்.

ராம்ஜி சிரித்தான். சட்டென்று எதிர்ச் சுவரில் முட்டிக் கொண்டு நின்றான். அது கண் வலியால் மட்டும் இல்லை என்பதை அடுத்த கணமே அவள் தெரிந்துகொண்டாள். அவனே சொன்னான். ''இப்போது உங்களை என்னால் பார்க்க முடியாது. கண் வலி காரணமாகக் காண்டாக்ட் லென்ஸைக் கழற்றி வைத்திருக்கிறேன். காண்டாக்ட் லென்ஸைக் கழற்றிவிட்டால் ஐம் ஆல் மோஸ்ட் ப்ளைண்ட். எதிராளியின் உருவம் மட்டுமே வெள்ளையாகத் தெரியும். அது ஆணு பெண்ணு என்பது கூடத் தெரியாது. அதனால்தான் சோடா பாட்டில் கண்ணாடி அசிங்கமாயிருக்கும் என்று காண்டாக்ட் லென்ஸ் அணிந்திருக்கிறேன். பொதுவாகக் கழற்றுவதே இல்லை...''

அந்தப் புதிய செய்தியை அவள் உன்னிப்பாக மனத்தில் வாங்கிக் கொண்டாள்.

அவன் உட்கார்ந்த நாற்காலிக்கு எதிர் நாற்காலியில் அவளும் உட்கார்ந்தாள். கண்களைச் சுழற்றிப் பார்த்தாள். கச்சிதமான சின்ன வீடு. ஆனால் அதன் ஒவ்வோர் அங்குலமும் அவனது பணக்காரத் தனத்தை டாம் டாமடித்தன.

''காலையில் என்ன சாப்பிட்டீர்கள்?'' என்றாள்,

''பார்த்தீர்களா? கிச்சனுக்குப் போய்க் கொஞ்சம் காப்பி கலந்து எடுத்து வாருங்களேன், இருவரும் சாப்பிடலாம். அங்கேயே பால், நெஸ்கேப் எல்லாம் இருக்கின்றன!'' என்றான்.

''நான் ஒன்று செய்யட்டுமா? நான் ஓட்டலிலிருந்து ஏதாவது வாங்கிவருகிறேன். இருவரும் அதைச் சாப்பிட்டுவிட்டு இங்கே நான் போடுகிற காப்பியைக் குடிப்போம். என்ன சொல்கிறீர்கள்?''

''நல்ல ஐடியா! அதோ அந்த மேசை டிராயரைத் திறந்து எனது பர்ஸை எடுங்கள்.''

''ஏன், நான்தான் தருகிறேனே?''

''நோ, நோ. நீங்கள் என் கெஸ்டாயிற்றே?''

அவள் ஒப்புக்கொண்ட புன்னகையுடன் மேசை இழுப்பறையைத் திறந்தாள், அதில் ஏதேனும் கிடைக்காதா என்ற ஆவலுடன். கிடைத்தது காண்ட்டாக்ட் லென்ஸ்கள். 'ரைட்' 'லெப்ட்' என்ற அடையாளக் குறிப்புள்ள தோல் உறையில் இருந்தன. சின்னத் தோலுறை. அதை மெதுவாகக் கிளப்பி அவனறியாதபடி தன் கைப் பையில் போட்டுக் கொண்டாள்.

பிறகு பர்ஸை எடுத்து அவனிடம் கொடுத்தாள். அவன் வாங்க மறுத்து ''நீங்களே எடுத்துக் கொள்ளுங்கள்... வீட்டு வாசலில் டாக்ஸி ஸ்டாண்ட் இருக்கிறது. டாக்சியில் போய் அதிலேயே திரும்புங்கள். ஓட்டல் பிருந்தாவனம் என்று சொல்லுங்கள், நல்ல ஓட்டல்'' என்றான்.

''இத்தனை வசதியுள்ளவர் ஒரு வேலைக்காரனைத் துணைக்குவைத்துக்கொள்ளக்கூடாதா?''

''நோ; சர்வெண்ட்ஸ் எனக்குப் பிடிக்கிறதில்லை. அவர்களுக்கு நம்மை வேவு பார்ப்பதே வேலையாக இருக்கும்.''

''அப்படியானால் வேவு பார்க்க வேண்டிய சுவாரஸ்யமான மனிதர் நீங்கள் என்று சொல்லுங்கள்!''

அவன் பெரிதாகச் சிரித்தான். அவளும் சிரித்து விட்டுக் கிளம்பினுள்.

பிருந்தாவனம் மிக அருகில் இருந்ததால் போன சுருக்கில் திரும்பினுள். இருவரும் சாப்பிட்டார்கள். பிறகு காப்பி குடித்தார்கள். அவன் அவளைப் பற்றி விசாரித்தான்.

பெற்றோருக்குத் தான் ஒரே மகள். நடுத்தரக் குடும்பம் என்றெல்லாம் அவள் பொய் சொன்னுள். சற்றே பொறுத்து, "ஓ. மணி பன்னிரண்ட [illegible] ட்டது. நான் கிளம்புகிறேன், ரா [illegible]. நேரம் போனதே தெரியவில்லை. அது [illegible] தரை மணிக்குடிபன் சாப்பிட்டீர்கள். மத்தியானம் பசிக்காதா?" என்ருள்.

"பசிக்கும்தான்."

"ஒன்று செய்யட்டுமா? வீட்டுக்குப் போய்ச் சமைத்துக் கேரியரில் சாப்பாடு எடுத்துக் கொண்டு வருகிறேன்."

"உனக்கு எதற்குத் தொந்தரவு, நீ கராத்தே கர்ளாக இருப்பதால் தயங்குகிறேன். இல்லாவிட்டால் இவ்வளவு பிரியத்துடன் நீ நடந்து கொள்ளுவதற்கு எனது எதிரொலி வேறு விதமாக இருக்கும்."

"ஓ. அந்த எதிரொலியெல்லாம் என்னிடம் வேண்டாம். அப்புறம் நீங்கள் பயப்படுகிற மாதிரி என் எதிரொலி ரொம்ப மோசமாக இருக்கும். கொஞ்ச நாள் போகட்டும். ஒருவரையொருவர் நன்ருகப் புரிந்து கொள்ள வேண்டியது முதலில் மிகவும் அவசியம் இல்லையா?"

"யூ ஆர் வெரி ஸ்மார்ட்!" என்று அவன் இரைச்சலாகச் சிரித்தான். அவள் புறப்பட்டாள்.

ராம்ஜி உற்சாகமான எதிர்பார்ப்புடன் படுத்துக் கொண்டிருந்தான். கடிகாரத்தில் மணி இரண்டாகியபோது கதவு தட்டப்பட்டது. எழுந்து போய்க் கதவைத் திறந்தான். மங்கலாக ஒரு பெண் தெரிந்தாள்.

"ஹலோ! சரியான சமயத்துக்கு வந்தாய். பசி இப்போதுதான் ஆரம்பமாயிற்று."

"மிஸ்டர் ராம்ஜி! ஐ'ம் நாட் பிரேமா. நான் அவளுடைய சிநேகிதி ரமா. பிரேமாவுக்குத் திடீரென்று ஒரு தந்தி வந்தது. அவள் உடனே ஊருக்குப் போயாக வேண்டும். அதனால் என்னிடம் சாப்பாட்டைக் கொடுத்து அனுப்பினுள்." — அவள் மிகவும் கிச்சலான குரலில் பேசினுள்.

"தாங்க்யூ. வேரி நைஸ் ஆஃப் யூ மிஸ் ரமா..." என்ற அவன் கண்களை மலர்த்தி அவளைப் பார்த்தான். எதிரே தெரிந்த மங்கிய உருவம் புடைவையில் இல்லை என்பதும் கால் சட்டை அணிந்திருந்தது என்பதும் மட்டும் தெரிந்தன.

அவள் அவனுக்குப் பரிமாறினுள். அவன் சாப்பிட்டான். பிறகு, அவளைப் பற்றி விசாரித்தான். தான் பிரேமாவுடன் கராத்தே பயில்வதாகவும் கராத்தே வகுப்பில்தான் பழக்கம் ஏற்பட்டு—நட்பாகியது என்றும் அவள் தெரிவித்தாள்.

அவன், "எனக்குத் தூக்கம் வருகிறது. திடீரென்று.... நான் கொஞ்சம் தூங்கட்டுமா?" என்ருன்.

"என்னைப் போகச் சொல்கிறீர்களா என்ன?" என்று அவள் சிரித்தாள்.

"நோ, நோ, யூ பி ஹியர்... நான் ஒரு குட்டித் தூக்கம் போட்டுவிட்டு எழுந்திருக்கிறேன். நீங்கள் அதோ அங்கே சில பத்திரிகைகள் இருக்கின்றன. எல்லாம் ப்ளேபாய் பத்திரிகைகள்!"

அவள் பதில் சொல்லாமல் நகர்ந்து மேசைக்குப் போனுள். அவன் ஒரு நெடிய கொட்டாவியுடன் சட்டென்று சரிந்து படுத்தான். அவன் நன்ருகக் கண்ணயர்ந்ததற்குப் பிறகு அவள் காண்டாக்ட் லென்ஸ்கள் அடங்கிய தோலுறையை அதற்குரிய இருப்பிடத்தில் வைத்தாள். பிறகு சாவி தொங்கிக் கொண்டிருந்த அலமாரியைக் குடைந்தாள். கல்யாணி குறிப்பிட்ட ஆல்பம் இருந்தது. டயரியும் இருந்தது. இரண்டையும் எடுத்துக் கொண்டாள். ஒரு கடிதக் கட்டு இருந்தது. வெவ்வேறு பெண்கள் எழுதினவை. அதையும் எடுத்துக் கொண்டாள்.

ராம்ஜி நன்ருக உறங்கிக் கொண்டிருந்தான். உதடுகள் பிரிந்திருந்த நிலை உறக்கத்தின் ஆழத்தை உணர்த்தியது. திடீரென்று அதிகரித்த ஆத்திரத்துடன் எழுந்த அவள் இனி எந்தப் பெண்ணிடமும் தகாத முறையில் நடந்து கொள்ள முடியாமற் போகிற அளவுக்கு இரண்டு உதைகளை அவன் மீது விட்டாள். அவன் வலியால் முனகித் திரும்பிப் படுத்தான்.

'ராம்ஜி! தூக்கத்திலிருந்து விழித்த பிறகு நீ விழிக்கப் போகிற விழியைப் பார்க்க நான் இங்கே இருக்க மாட்டேன். அது எனக்குப் பெரிய நஷ்டம்தான்!'

ரமா வீட்டுக்குத் திரும்பி வந்ததும் தனது கால் சட்டை, மேல் சட்டையைக் களைந்து புடைவையில் புகுந்து, தொண்டையைக் கனைத்துச் சரி செய்து கொண்டு பிரேமாவாக மறுபடியும் மாறி, எஞ்சிய தூக்க மாத்திரைகளை வெளியே வீசிப் போட்டு, பாட்டிலையும் எறிந்தாள்.

---

மாணவர்க்கென ஒதுக்கப்பட்ட College Campus எனக்கு மாணவன் என்ற முறையில் மிகவும் பிடித்துள்ளது. ஆனுல் இரண்டு பக்கம் தான் என்று கஞ்சத்தனம் பண்ணுவது பிடிக்கவில்லை. கூட்டுங்கள் சார். சினிமா செய்திகள் தேவைதான். அவ்வப்போது அளவுக்கு மீறிவிடுகின்றன.

எஸ். ஆர். ஸ்வாமி, திருநெல்வேலி-11



'நூல்வேலி' படத்தில் கதாசிரியையாக நடித்த சுஜாதாவை 'மழலைப் பட்டாளங்கள்' படத்தில் வாசகியாக நடித்த சுமித்ரா சுஜாதாவின் வீட்டில் சந்தித்து உரையாடுகிறார். தன் வீட்டுக்கு வந்த சுமித்ராவை வாசலிலேயேபார்த்து வரவேற்றார் சுஜாதா.

சுமித்ரா: நம்ம ரெண்டு பேரும் சந்திச்சு ரொம்ப நாளாச்சு இல்லையா?

சுஜாதா: ஆமாம். கடைசியாகப் பார்த்தது ஒரு பொது விழாவில்தானே!

சுமித்ரா: நான் இந்த வீட்டுக்கு வரது இது தான் முதல் தடவை.

சுஜாதா: அப்படியா? அப்ப வா. வீட்டைச் சுற்றிக் காண்பிக்கிறேன். (அழைத்துச் சென்று சுற்றிக் காண்பித்தார்.)

சுமித்ரா: படத்தில் எழுத்தாளராக நடிச்சீங்களே அப்ப எப்படி இருந்தது?

சுஜாதா: புதுமையான அனுபவம்தான்.. எழுத்தாளர் மாதிரி நடித்திருக்கிறேனே யொழிய எதையும் எழுத முயன்றதில்லை. ஆறு வார, மாத பத்திரிகைகளில் வருவதை யெல்லாம் படிப்பேன். மழலைப் பட்டாளத்தில் வாசகியாக நடித்த உன் அனுபவம் எப்படி?

சுமித்ரா: உண்மையைச் சொல்லப்போனால் பேய் பிசாசு, கொலை இந்த மாதிரி கதைகளைப் படிக்கும்போது மட்டும் தனியா ரூம்லே உட்கார்ந்து படிக்கமாட்டேன். பெரிய ஹால். நாலு பேர் நடமாடற இடமாப் பார்த்து உட்கார்ந்துதான் படிப்பேன். எனக்குப் பிடித்த எழுத்தாளர் 'லக்ஷ்மி'. குடும்பப் பாங்காக, பண்பு குறையாம, ரொம்ப அழகா எழுதறாங்க. சமீபத்தில் நான் படித்த அவர் கதை 'வானம்பாடிக்கு ஒரு விலங்கு' கதை எனக்கு ரொம்பப் பிடிச்சது. ஸ்வேதாவை என்னால் மறக்க முடியாது. உங்களுக்குப் பிடித்த எழுத்தாளர்கள் யார்?

சுஜாதா: சிவசங்கரி, சுஜாதா. நான் இரண்டு பேரையும் சந்தித்ததே எதிர் பாராத விதத்தில்தான். ஒரு பத்திரிகையோட பேட்டிக்காக நான் எழுத்தாளர் சுஜாதாவைச் சந்தித்தேன். பல விஷயங்களை அவர் தெரிந்து வைத்திருக்கிறார் என்பதை அவர் பேச்சிலிருந்து தெரிந்து கொண்டேன். எழுத்தாளர் சிவசங்கரியைச் சந்தித்தது நான் உடம்பு சரியில்லாமல் மருத்துவ மனையில் இருந்த பொழுது. யாரையோ அங்கு பார்க்க வந்தவர், நான் உடல்நிலை சரியில்லாமல் படுத்திருக்கிறேன் என்று தெரிய வந்து என்னைக் காண வந்தார். கண்டு, கேட்ட அனுபவங்களை அப்படியே தத்ரூபமாக எழு

# சந்திப்பு: "எழுத்தாளர்":சுஜாதா "ரசிகை":சுமித்ரா

நான் ஏகமாப் படிக்கக் குவிக்கிறநா சொல்ல முடியாது. ஓய்வாக இருக்கிறபோது படிப்பேன். நல்ல கதை என்று எல்லோரும் சொன்னா நிச்சயம் படிப்பேன். எனக்குப் பிரமாதமாக ஒண்ணும் எழுதத் தெரியாதுன்னுக் கூட எழுதணும்கிற ஆசை மட்டும் உண்டு. பொழுது போகாதபோது ஏதாவது எழுதிக்கொண்டிருப்பேன்.

சுஜாதா: ஏன் எழுதக் கூடாது? தைரியமா நல்லா எழுதலாம். நம்மைப் போன்ற நடிகையான ஸ்ரீபிரியா எழுதறாங்க. முயன்றால் முடியாது என்று எதுவும் இல்லை. எனக்குத் துப்பறியும் கதை என்றால் ரொம்பப் பிடிக்கும் உங்களுக்கு?

சுமித்ரா: எனக்குச் சமூகக் கதை தான் அதிகம் பிடிக்கும். துப்பறியும் கதைகளும் படிப்பேன். ஆனால்

''சந்திப்பு என்றால் எதிர் எதிரே உட்கார்ந்து பேசற மாதிரிதான் படம் எடுக்கணுமா என்ன?''
- சுமித்ரா

''வேண்டாம் நெருங்கிய தோழிகளாய் உட்கார்ந்திருக்கோம்,க்ளிக் பண்ணுங்க.''
- சுஜாதா



தும் திறமை பெற்றவர்... ஆமா, உங்க கல்யாணம் எப்போ?

சுமித்ரா: இந்த வருடம் இல்லை. இன்னும் ஒரு வருசம் போகட்டும் பார்க்கலாம். இது பத்திரிகைக்காகச் சொல்ற பதில் இல்லை. உண்மையான பதில். சரி, உங்களையே ஒரு கதை எழுதச் சொல்லிக் கேட்டா என்ன செய்வீங்க? உங்க வாழ்க்கையில் சந்தித்த ஒரு சம்பவத்தைத் தானே எழுதுவீங்க?

சுஜாதா: கேள்விப்பட்ட சம்பவமாகவும் இருக்கலாம். அப்படி ஒரு சம்பவத்தைக் கூறட்டுமா?

சுமித்ரா: சொல்லுங்க, சொல்லுங்க!

சுஜாதா: இருவருமே நெருங்கிய தோழிகள். ஒருத்தி பணக்காரி, மற்றொருத்தி ஏழை. பணக்காரப் பெண்ணின் வீட்டில் ஏழைப் பெண்ணுக்கு எப்பொழுதுமே அதிக மதிப்பும் வரவேற்பும் இருந்தது. பணக்கார வீட்டில் உள்ளவர்கள் எல்லோருமே ஏழை பெண்ணைத் தங்கள் வீட்டுப்பெண்ணாகவே எண்ணிப் பாசத்தைப் பொழிந்து வந்தார்கள். பெண்கள் இருவரின் நட்பும் அதிகரித்தது. பரஸ்பரம் ரகசியங்களைப் பரிமாறிக் கொண்டனர். திடீரென்று ஒரு நாள் காலை பணக்கார வீட்டுப் பெண் தன் படுக்கை அறையில் இறந்து கிடந்தாள். தற்கொலையா? கொலையா? பணக்காரப் பெண்ணின் ரகசியம் முழுவதையும் அறிந்தவள் இந்த ஏழைப் பெண் ஒருத்திதான். வீட்டில் உள்ளவர்கள் எல்லோரும் மரணத்தை, விபத்து என்று மழுப்பிவிட முனைந்தார்கள். எல்லாவற்றுக்கும் சாட்சியாக இருந்த ஏழைப் பெண்ணோ மௌனமாக இருந்தாள். பலர் பலவிதமாகக் கேள்வி கேட்டும் இவளிடமிருந்து எந்த விதப் பதிலும் வரவில்லை. எப்படி உண்மையை அவளிடமிருந்து வரவழைப்பது? ஏன் அவள் மௌனியாகி விட்டாள்? ரகசியங்கள் என்ன? இதுக்கு மேலே எப்படி எழுதலாம் என்று யோசிக்க வேண்டியதுதான்.

சுமித்ரா: நான் கண்டிப்பா யோசிக்கப் போறேன். கதைக் கரு நல்லா இருக்கு.

சுஜாதா: நீங்க யோசியுங்க வேண்டாங்கலே; ஆனா கல்கி வாசகர்களையும் யோசிக்கச் செய்தால் என்ன?

சுமித்ரா: பிரமாதமான ஐடியா. கல்கி வாசகர்களிலே இதுவரை எழுத்தாளர்னு பெயர் வாங்காதவங்களை எழுதச் சொல்லலாம். சிறந்ததாகத் தேர்ந்தெடுக்கப்படும் கதையை எழுதிய அறிமுக எழுத்தாளருக்கு நான் நூறு ரூபாய் பரிசு தரத் தயார்!

இப்படிக்கூறியபடியே சுமித்ரா எழுந்து விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டார். சுஜாதா வாசல் வரை சென்று வழியனுப்பி வைத்தார்.

பேட்டி: **சலன்**
புகைப்படம்: **யோகா**

சுஜாதா கூறிய கதைக் கருவை மையமாக்கி கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாத வகையில் சிறுகதை எழுதி அனுப்புமாறு நேயர்களை வேண்டுகிறோம். அறிமுக எழுத்தாளர் என்ற உறுதி மொழி தேவை. பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளை திருப்பி அனுப்ப இயலாது. உறையின் மேல் "சுஜாதா சொன்ன கதை" என்று குறிப்பிட வேண்டும். முடிவு தேதி டிசம்பர் 31. சிறந்ததாக கல்கி ஆசிரியர் குழு தேர்ந்தெடுக்கும் சிறுகதைக்கு சுமித்ரா அறிவித்த பரிசு வழங்கப்படும். கடிதப் போக்குவரத்து கிடையாது.

# வாசகர்களைத் தாக்கும் நோய்கள்!




'கழுத்தளுக்கியா':

நம் அருகே அமர்ந்திருக்கும் ஒருவர் ஒரு நாளிதழையோ, அல்லது பத்திரிகையையோ புரட்டும்போது இவ்வியாதி நம்மைத் தாக்கும். அதன் விளைவாக நம் கழுத்து அந்தப் பத்திரிகையை நோக்கி மெதுவாக நீண்டு முடிவில் அப் பத்திரிகையின் மீது நிலைத்து நிற்கும்படி யாகிவிடும்.

**சிகிச்சை**

பக்கத்திலுள்ளவர் பத்திரிகையைப் பிரிக்கும்போது உடனே சென்று நாமும் ஒரு பத்திரிகையைக் காசு கொடுத்து வாங்கி வந்தால் இவ்வியாதி நம்மை நெருங்காது.

'கிறுக்கல்பாய்ட்':

லைப்ரரிப் புத்தகங்களைப் பார்த்தவுடன் இவ்வியாதி பலருக்கு ஏற்படும். இதன் விளைவாக பேனாவை எடுத்துத் தன் பெயர் உட்பட ஏதேனும் ஒரு விஷயத்தை அப்புத்தகங்களில் குறுக்கும் நெடுக்குமாக எழுதத் தூண்டும்.

**சிகிச்சை**

புத்தகங்கள், குறிப்பாக லைப்ரரியிலிருந்து எடுத்து வரும் புத்தகங்களைப் படிக்கும்போது கைகள் இரண்டையும் பின்புறம் கட்டிக் கொள்ளலாம்.

'சரட்'மேனியா:

லைப்ரரிகளில் மட்டுமே ஏற்படும் மிகக் கொடிய வியாதி இது. அழகிய படங்களையோ அல்லது போட்டி கூப்பன்களையோ பத்திரிகைகளில் கண்டவுடனே, அப்பக்கங்களைச் 'சரட்'டெனக் கிழிக்கத் தூண்டும்.

**சிகிச்சை**

இந்த வியாதிக்குச் சிகிச்சை அளிப்பதில் திறமை பெற்றவர்கள் லைப்ரேரியன்கள் மட்டுமே. எனவே இவ்வியாதி வாசகர்களைத் தாக்கிக் கொண்டிருக்கும் போது, லைப்ரேரியனை அழைத்துவந்து அவர்கள் முன் நிறுத்தினால், மிகச் சிறந்த சிகிச்சைக்கு அவர் வழி செய்வார்.

- மு. கணேசன்

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543) Editor: K. Rajendran




கொசுக்களை 'பேக் அப்' செய்து விரட்ட உதவுவது டார்டாய்ஸ் கொசுவர்த்திச் சுருள்




கொசுக்களை நடனமாடவைத்து விரட்டுகிறது

டார்டாய்ஸ் கொசு
வர்த்திச் சுருள்




கொசுத் தொல்லையற்ற தூக்கத்தைப் பெற நித்ராதேவியை வேண்டத் தேவையில்லை. அதற்கு உதவுவது டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்

# டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்



தயாரிப்பாளர்:
பாம்பே கெமிகல்ஸ் ப்ரைவேட் லிமிடெட்
போர்ட், பம்பாய்-400 023. போன்: 273831

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka




# நகரெங்கும் அணி செய்வோம் அதன் துவக்கமாக உங்கள் வீடுகள் அணி பெறட்டும்.

திறமை மிக்க இளங்கலைஞரது வண்ண ஓவியங்களை, சுவரணைச் சட்டங்களிலும் (hoardings), சுவர்களிலும், கட்டிடங்களிலும் தீட்டுவோம். பெரு நகரங்களை அணி செய்வதன் ஆரம்பமாக! வழக்கமான விளம்பர வாக்கியங்களை விட அழகு மிக்கவையாக இருக்கும் இவை.

மேலும், நகரமே அழகொளி பெற்றுத் திகழும். இளங்கலைஞர்தம் திறமை ஆதரவு பெறும். சிறந்த கலையைக் கண்டு ரசிக்க உங்களுக்கும் ஒரு வாய்ப்பாகும் அல்லவா?

உங்கள் வீட்டை அணி செய்ய நீங்கள் உபயோகிக்கும் வண்ணங்களையே, இப்பணிக்கும் நாம் பயன்படுத்துவோம். அவ்வண்ணங்கள் தாம் கர்வாரே பெயின்ட்ஸ்.

கர்வாரே ஸின்த்தெடிக் இனாமல்களும், அக்ரிலிக் இமல்ஷன்களும் பல்வகை வண்ணங்களில் கிடைக்கின்றன. கண்ணுக்கிதமான இளம் வண்ணங்கள். அழுத்தமான, பளிச்சிடும் வண்ணங்கள். வெயில், மழை இவற்றால் பாதிப்புறாத வண்ணங்கள். ஒழுங்காகப் பரவக் கூடியவை. நீரால் கழுவக் கூடியவை. ஆண்டாண்டுகள் நீடிப்பவை. உங்கள் வீட்டை எழிற் களஞ்சியமாக்கும்; அது கண்டு உங்கள் மனம் மகிழ்ச்சியிலாழும்!

வாருங்கள். கர்வாரே பெயின்ட்ஸ் கொண்டு நகரெங்கும் அணிசெய்வோம்.








**கர்வாரே பெயின்ட்ஸ்**



HTB-GPL-62 96